# வாழ்வை நேசித்த பகத்சிங்



சிறு வெளியீடு

செப்டம்பர் 2019

- ஆர். பட்டாபிராமன்

# வாழ்வை நேசித்த பகத்சிங்

இந்த சிறு வெளியீட்டில் பகத்சிங் குறித்து வெவ்வேறு தருணங்களில் எழுதிய மூன்று கட்டுரைகளை இணைத்துக் கொடுத்துள்ளேன். 'பகத்சிங்கை காவு கொடுத்தாரா காந்தி' எனது காந்தியைக் கண்டுணர்தல் புத்தகத்தில் இடம் பெற்ற கட்டுரை. எனது இணையதளத்தில் செப்டம்பர் 20, 2018ல் வெளியிட்டும் இருந்தேன். இங்கு மூன்றாவது கட்டுரையாக அது வைக்கப்பட்டுள்ளது. பகத்சிங் இளம் வாசகர்களுக்காக என்ற முன்வைப்பில் 'மாவீரன் பகத்சிங் வாழ்க்கை' என்கிற கட்டுரை இணையதளத்தில் டிசம்பர் 4, 2016ல் வெளியிடப்பட்ட ஒன்று. இரண்டாவது கட்டுரையான பகத்சிங் வாசிப்பு என்பது 2022 துவக்க நாட்களில் முகநூலில் அவ்வப்போது வெளியிட்ட இடுகைகளின் தொகுப்பு எனலாம். சமன்லால் தொகுத்த பகத்சிங் ரீடரை வாசித்தபோது தோன்றிய இடுகைகள் அவை.

பகத்சிங் பொறுத்தவரை காலச்சூழல் அவரை சிறைக்குத் தள்ளி தூக்குமேடைக்கு அழைத்துச் சென்றது. அவர் மிகுந்த சுயமரியாதையுடன் விடுதலை மனிதராக சமத்துவ இந்தியாவில் வாழ விழைந்தவர். அதனால்தான் இவ்வெளியீட்டிற்கு வாழ்வை நேசித்த பகத்சிங் என தலைப்பிட்டேன். அதேநேரத்தில் தனது வாழ்க்கை என்பது தங்களை அடிமைப்படுத்தி நிற்கும் அதிகாரம் மிகுந்த ஏகாதிபத்தியத்தின் காருண்யம்- பிச்சை என இருந்துவிடக்கூடாது எனக் கருதி உயிர் துறந்தவர் பகத்சிங்.

தன் தண்டனை குறைப்பிற்காக போராடிய தந்தையின் அப்பீலை கடுமையாக விமர்சித்தவராக அவர் இருந்ததைக் காண்கிறோம். தாங்கள் பயங்கரவாத நடவடிக்கைகளில் ஈடுபட்ட அனுபவத்தில், அது வழியில்லை என சக இளைஞர்களுக்கு அறிவுரை சொன்னதையும் காண்கிறோம். மார்க்சியத்துடன் நெருக்கமாக வந்தாலும் அனார்க்கிச போராளிகளையும் அவர் தேடியிருக்கிறார். அனார்க்கிசம் குறித்து கட்டுரைகள் எழுதினார், அனார்க்கிசம் என்றால் அலர்ஜி ஆகவேண்டாம் நமது வசுதேவ குடும்பகம்தான் அது எனக்கூட எழுதியுள்ளார். சோசலிசம் என பேசினாலும், அப்போது இருந்த கம்யூனிஸ்ட் குழு அல்லது கட்சியில் நேரிடையாக அவர் உறுப்பினராகாமல் இருந்துள்ளது ஏன் எனத் தெரியவில்லை.

தேசபக்த தலைவர்களைப் போற்றியிருந்தாலும், அவர்களை தன் பார்வையில் அவர் விமர்சிக்கவும் செய்துள்ளார். லாலாஜியை தாக்கியவர்களுக்கு மரணம் தான் பதிலடி என நினைத்து செயல்பட்டிருந்தாலும், லாலாஜியை அவர் நேரிடையாக விமர்சிக்காமல் இல்லை. நேரு, நேதாஜி குறித்தும் அவர் பேசியதைக் காண்கிறோம்.

தான் காதலித்தது குறித்து வெளிச்சொல்லாமல், அதனை மனதில் பெருமிதம் பொங்க நினைத்திருந்ததை அறிகிறோம். கோழையாக தற்கொலை எண்ணத்தில் தன் தோழன் போய்விடக்கூடாது என்பது குறித்தும் அவர் பேசியதைக் காண்கிறோம்.

பகத்சிங் வாழ்க்கை மீது  கரிசனம் கொண்ட பலர் அவரை தண்டனையிலிருந்து மீட்க முயற்சித்தாலும், அதன் முழு விமர்சனம் காந்தி மீதே இன்றும் இருக்கிறது. அது சரியா என்பதை முழுமையாக ஒரு கட்டுரை விசாரிக்கிறது. மற்றொன்று பகத்சிங் வாழ்க்கையின் பல நிகழ்வுகளை தொட்டுச் செல்கிறது.

பகத்சிங் பெருமிதம் இன்றும் இந்தியாவின் ஏராள இளைஞர்களை கவ்வி பிடித்துள்ளதைக் காண்கிறோம். செகுவாராவை மார்க்சிய உலகம் கொண்டாடுவது போல் பகத்சிங் உலக மொழிகளில் போயிருந்தால் அவரும் உலக இளைஞர்களின் icon ஆக இருந்திருப்பார் என்பதில் அய்யமில்லை.

செகுவாரா ஆனாலும் பகத்சிங் ஆனாலும் அவர்களின் தியாகம்- உடலை பெரும் இலட்சியத்திற்காக ஒப்புக்கொடுத்தது என்ற வகையில் போற்றுதலுக்குரியவர்கள். ஆனால் வாழவேண்டிய வயதில் அப்படி அவர்கள் போயிருக்கவேண்டுமா என்ற கேள்வி என்னுள் தொடர்ந்து பதிலைத்தேடிக்கொண்டேயிருக்கிறது. மற்றவர்க்கு மரண தண்டனை அளிக்க அவர்கள் எடுத்த அதே அதிகார துப்பாக்கிகள் தான் எதிர் அதிகாரங்களால் அவர்களின் உடல்களை வாரிக்கொண்டு போயின என்பது சோகமல்லவா?

வன்முறை மார்க்கமா என்ற பெருங்கேள்வியை இந்திய அனுபவம் உலகின் முன் காந்திய  உரையாடல் மூலம் வைத்ததை பொருட்படுத்தாமல் செல்ல முடியாது. இந்த அம்சம் பகத்சிங் குறித்த உரையாடலில் எனக்கு முக்கியமாக தோன்றுகிறது. இதில் இடம் பெரும் கட்டுரைகளை படிப்பவர் எவரும் அவை எனது critical Appreciation of Bhagat Singh என்பதை உணரமுடியும்.

27-9-2022 -ஆர்.பட்டாபிராமன்

மாவீரன் பகத்சிங் வாழ்க்கை

பஞ்சாப் மகத்தான தேசபக்த, புரட்சியாளர்களின் பூமியாக விடுதலை காலத்தில் திகழ்ந்தது. .உயிர் தியாக பூமியாகவும் இருந்தது. கல்சா சர்தார்ஸ் என்பவர்கள் மகராஜா ரஞ்சித் சிங் ஆட்சியில் முக்கிய பங்காற்றி வந்தவர்கள். பிரிட்டிஷ்காரர்களை தீரத்துடன் எதிர்த்து போராடியவர்கள்.

அர்ஜூன்சிங் லியால்பூர் பங்கா கிராம கல்சா சர்தார் வழிவந்தவர். தேசப்பற்றும் மூடநம்பிக்கை எதிர்ப்பும் கொண்டவராக இருந்தவர். மனித சமுகம் அன்பினால் சகோதரத்துவத்தால் மட்டுமே தழைத்தோங்கும் என்பதில் உறுதியாக இருந்தவர். அவருக்கும் ஜெய்கவுர் பெண்மணிக்கும் மகன்களாக சர்தார் கிஷன்சிங், அஜித்சிங், ஸ்வரன்சிங் பிறந்து வளர்ந்தனர். தயானந்த சரஸ்வதியின் ஆர்யசமாஜ கொள்கைகளால் குடும்பம் கவரப்பட்டது. அர்ஜூன்சிங் தயானந்தாவை சந்தித்து பெற்ற மனமாற்றம் ஆர்யசாமாஜிகளாக குடும்பத்தை மாற்றியது. புனித நூல் அணிவித்து தயானந்தாவல் அவர்கள் மாற்றப்பட்டனர். தனது குடும்பத்தில் தனது சொந்த சகோதரர்கள் பிரிட்டிஷாருக்கு ஆதரவாக செயல்பட்டு சிறு சலுகைகளை அனுபவித்தபோதும் அர்ஜூன் தொடர்ந்து எதிர்ப்பாளராகவே செயல்பட்டார்.

பிரிட்டிஷ் எதிர்ப்பை கைவிட்டு குடும்ப வாழக்கையை ஒழுங்காக கவனிக்க உறவுக்காரர்கள் வற்புறுத்தினர். மூத்தமகன் கிஷனுக்கு ஆரம்பத்தில் அரசியலைவிட சமுக பிரச்சனைகளில் ஆர்வம் இருந்தது. விதர்பா வறட்சி அறிந்து அரசாங்கம் பாராமுகமாக இருப்பதை உணர்ந்து தனது சகாக்களுடன் அங்கு வாழ்ந்த மக்களின் பசித்துயரைப் போக்க செயலில் இறங்கினார் கிஷன். அங்கிருந்த 50க்கும் மேற்பட்ட அநாதை குழந்தைகளுக்கு பெரோஷ்பூரில் கருணை இல்லம் உருவாக்கினார்.

புரட்சியாளராக இருந்த சசிந்திரநாத் சன்யாலுடன் கிஷனுக்கு பழக்கமிருந்தது. தொடர்ந்த காலத்தில் அரசியல் வழக்குகளாக 40க்கும் மேற்பட்ட வழக்குகள் கிஷன் மீது போடப்பட்டிருந்தன. இரண்டு ஆண்டுகளுக்கு மேல் அவர் சிறையில் வாட நேர்ந்தது. கிஷன் சிங் துணவியாக வந்த வித்யாவதிக்கு புரட்சிகர முற்போக்கு வீட்டுச்சூழல் பழக்கமாகத் துவங்கியது. பாம்பின் விஷத்தையும் முறித்த உடல் சக்தி கொண்டவர் என உடன் இருப்பவர்களால் அவர் புகழப்பெற்றார்.

லாலா லஜ்பத்ராய் தலைமையில் 1907ல் மக்கள் பிரிட்டிஷ் எதிர்ப்பு போராட்டங்களில் இறங்கினர். அஜித்சிங் லஜ்பத்ராயுடன் பர்மா மாண்ட்லே சிறைச்சாலையில்

அடைக்கப்பட்டார். சகோதரர்கள் கிஷன் மற்றும் ஸ்வரன் கூட்டங்களில் பிரிட்டிஷ் எதிர்ப்பு உரையை தந்தனர். இருவரும் கைதாகி சிறையில் அடைக்கப்பட்டனர். வித்யாவதி கருவுற்றிருந்த தருணமது. சகோதரர்கள் உரையாடலின் போது தனக்கு நாடே வியந்து கொண்டாடும் மகன் தேச அர்ப்பணிப்பிற்காக பிறந்தால் மகிழ்ச்சி என்கிறார் கிஷன். செப் 27 2007ல் பேரன் பகத்சிங் பிறந்த செய்தியை அர்ஜுன்சிங்கும் பாட்டி ஜெய்கௌரும் கொண்டாடி மகிழ்ந்தனர். ஆனால் மகன்கள் மூவரும் சிறைக்கொட்டடியில் என்ற துயரம் குடும்பத்தில் இருந்தது. கிஷனும் ஸ்வரனும் பிணையில் வர அனுமதிக்கப்பட்டனர். அஜித் விடுதலை ஆனார்.

1908 ல் திலகரின் கைது போராட்டங்களை தீவிரப்படுத்தியது. கிஷன்சிங் பாரத் மாதா சொசைட்டியை நிறுவினார். அஜித்சிங் பல்வேறு பகுதி மக்களிடம் தீவிரமாக இயங்கத் துவங்கினார். கிஷன் அறிவுரையை ஏற்று வெளிநாட்டிலிருந்து தேசபக்த புரட்சிகர கடமையாற்றுவது என அய்ரோப்பா சென்றார். இரண்டாம் உலகப்போரின் போது ரேடியோ ரோமில் அவர் ஆற்றிய உரை பெரிதும் பாரட்டைப் பெற்றது. 1946ல் இடைக்கால நேரு அரசாங்கம் அமையும்வரை 35 ஆண்டுகளுக்கு மேல் குடும்பம் துறந்து செயல்பட்டவர் அஜித். தனது சிறை வாழ்க்கையிலும் பிற நாட்களிலும் அவர் ஏராளம் படித்தும் எழுதியும் வந்தார். ’முகிபன்னே வாதன்’ பெயரில் அவை வந்தன., அரசாங்கம் அவரது எழுத்துக்களை தடை செய்தது. பாரதமாதா சொசைட்டியும் தடை செய்யப்பட்டது. கிஷன்-ஸ்வரன் கைது செய்யப்பட்டனர். லாகூர் மத்திய சிறையில் அடைக்கப்பட்டனர். சிறை உழைப்பு ஸ்வரணை பலகீனமாக்கியது, தனது 23ஆம் வயதில் அவர் மரணமுற்றார். இதே வயதில் தங்கள் குடும்ப வாரிசு பின்னர் வீரமரணம் அடையப்போகிறது என்பதை அப்போது அக்குடும்பம் அறிந்திருக்காது.

கிஷனுக்கு பகத்சிங் மற்றும் அவருடன் 7 பேர் உடன்பிறந்தனர் .ஜகத் ,குல்வீர், ரஜேந்தர், ரண்வீர், அமர்கௌர், பீபிபிரகாஷ் கௌர், சகுந்தலா என அவர்கள் பெயரிடப்பட்டனர். சிறுவயதில் அறியாப்பருவத்தில் வீட்டிற்கு வரும் கிஷன் நண்பர்களிடம் நான் துப்பாக்கிகளை விதைப்பேன் என பகத்சிங் கூறியதாக பதிவுள்ளது. அறிவார்ந்த போர்க்குணம் வரவழக்கத்தகுந்த குடும்ப சூழல் பகத்திற்கு வாய்த்தது. தனிமை விரும்பியாகவும் அவ்வப்போது சிந்தனை வயப்பட்டவரகவும் பள்ளிக்காலத்தில் பகத் அவரது சகோதரர்களால் உணரப்பட்டுள்ளார். தாய் இதை உணர்ந்து கவலையடைந்ததாகவும் கிஷனிடம் தெரிவித்ததாகவும் பதிவுள்ளது. புதிய சூழலுக்காக கிஷன் குடும்பம் நவகோட் பகுதிக்கு செல்கிறது. பிரிட்டிஷ் ஆதரவு சீக்கிய குழந்தைகள் படிக்கும் பள்ளியில் சேர்க்காமல் லாகூரில் தயானந்தா ஆங்கில வேத பள்ளியில் பகத் சேர்க்கப்படுகிறார். அப்பள்ளியில் ஆங்கிலம், சமஸ்கிருதம், உருது கல்வியை பகத்சிங் பெறுகிறார்.

பிரிட்டிஷாரின் 1919 ஆள்தூக்கி கொடும் ரௌலட் சட்டம் போராட்டக்கனலை ஏற்படுத்துகிறது. அரசியல் கைதிகளுக்காவது இச்சட்டம் பாயக்கூடாது என்கிற காந்தியின் வேண்டுகோள் ஏற்கப்படவில்லை. சென்னையில் ராஜாஜியை சந்தித்த பின்னர் ஹர்த்தால் போராட்ட அறிவிப்பை காந்தி மார்ச் இறுதியில் வெளியிடுகிறார். பள்ளி கல்லூரியிலிருந்து மாணவர்கள் வெளியேறுகிறார்கள். காந்தி கைது செய்யப்படுகிறார். வன்முறைகள் எழுகின்றன என்பதறிந்த அவர் சத்தியாக்கிரகத்தை கைவிடுகிறார்.

பஞ்சாபில் சைபுதின் கிச்லு கைது செய்யப்பட்டு இருக்குமிடம் அறியாமல் வைக்கப்படுகிறார். போராட்டக்காரர்கள் மீது துப்பாக்கி சூடு ஏப்ரல் 10, 1919ல் நடத்தப்பட்டு தெருவில் பிணமாகி போகின்றனர். பஞ்சாப் வைசாகி நாளான ஏப் 13 என்பது குரு கோவிந்த சிங் மக்களை திரட்டிய நாள். அமிரத்சரஸ் நகரில் 6000 மக்கள் ஜாலியன்வாலாபாக்கில் திரண்டனர். லெப்டிணண்ட் கவர்னராக இருந்த மைக்கேல் டயர் , ஜெனரல் டயரை 90 ஆயுத வீரர்களுடன் அனுப்பினான். நாய்களை சுடுங்கள் என உத்தரவு வந்ததும் குண்டுகள் பொழியப்பட்டன. எந்த முன்னறிவிப்பும் இல்லாததால் மிருகத்தன தாக்குதலில் மக்கள் பிணக்குவியலாயினர். மதன் மோஹன் மாளவிய 1400பேர் சுடப்பட்டு இறந்ததாக தெரிவித்தார். சிவில் சர்ஜன் ஸ்மித் கணக்கு 1800 என்றது. ரவீந்திரநாத் தாகூர் தனது பட்டத்தை துறந்தார். பின்னால் உத்தம் சிங் ஜெனரல் டயரை சுட்டு வீழ்த்தினார்.

பகத்சிங் ஜாலியன்வாலாபாக் அறிந்து அங்கிருந்த பிணக்குவியலை இரத்த கசிவுகளை பார்த்து மனம் நசுங்கிப் போனார். 12வயது பள்ளி மாணவன் மத்தியில் மாபெரும் பாதிப்பை இந்நிகழ்வு உருவாக்கியது. தனது சகோதரி அமரிடம் தான் ஒரு பாட்டிலில் எடுத்து வந்த இரத்தம் தோய்ந்த மண்ணைக்காட்டி இருவரும் அதன்மீது செடியை நடுகின்றனர். நமது சிறியதந்தை அஜித் இருந்தால் பிரிட்டிஷாரை விரட்டியிருப்பார் என சிறார் இருவரும் பேசிக் கொள்கின்றனர். நான் அவரை போலவே பழிவாங்குவேன் என பகத் சொல்கிறார்.

1920ல் ஒத்துழையாமை-பகிஷ்கரிப்பு போராட்டத்தை காந்தி அறிவிக்கிறார். காந்தி கூட்டம் லாகூரில் என அறிந்து தனது நண்பர்களுடன் பகத் செல்கிறார். காந்தியின் உரை கேட்டு 9வது படித்துக்கொண்டிருந்த பகத் பள்ளியிலிருந்து வெளியேறி ஒத்துழையாமை போராட்டத்தில் பங்கேற்கிறார். ஒடுக்குமுறைகளை அரசாங்கம் அதிகப்படுத்துகிறது தலைவர்கள் கைது படலம் நடந்தேறுகிறது. 25000 மக்கள் கைதாகியிருப்பர்.

ஜனவரி 4, 1922 உத்தரபிரதேசம் சௌரி சௌரா பகுதியில் போலீஸ்காரர்களின் ரசனை குறைவான சங்கேதங்களால் போராளிகள் கோபமூட்டப்பட்டனர். காவல் நிலையம் தீக்கிரையானது. போலீஸ்காரர்கள் மாண்டனர். அகிம்சை அறவழிப் போராட்டத்திற்கு நாடு தயாராகவில்லை என காந்தி போராட்டத்தை திரும்ப பெற்றார். ஆறு ஆண்டுகள்

கடும் தண்டனை என அவர் சிறைக்கு அனுப்பப்பட்டார். அந்நிய துணிகள் தீக்கிரையாக்கும் போராட்டத்தில் பகத் நண்பர்கள் தீவிரமாக பங்கேற்றனர். பள்ளிப்படிப்பை காந்தி அறைகூவலை கேட்டு கைவிட்டது, காந்தி போராட்டத்தை கைவிட்டது போன்றவை பகத்சிங்கின் மனப்போராட்டத்தை அதிகப்படுத்தின. நண்பர்கள் மத்தியில் விவாதம் எழுந்தது. ஓரிரு நிகழ்வுகளை காரணம் காட்டி போராட்டத்தை நிறுத்தியது தவறு என பகத் பேசத்தொடங்கினார்.. பத்தொன்பது வயது சர்தார் கர்த்தார்சிங் தனது ஆயுத கலகத்தால் கைதாகி மரணதண்டனை பெற்று உயிர்த்தியாகம் செய்ததும் அவரது உரையும் பகத்சிங்கை கவர்ந்தன. அகிம்சை வழியில் பிரிட்டிஷாரை தூக்கி எறிய முடியாது என்ற எண்ணம் ஏற்பட்டது.

ஒத்துழையாமையில் பள்ளியிலிருந்து வெளியேறிய மாணவர்கள் படிப்பை தொடர ஆங்காங்கே கல்லூரிகளை தேசியத்தலைவர்கள் நிறுவத்துவங்கினர். லாலா லஜ்பத்ராய் துவங்கிய தேசிய கல்லூரியில் அங்கிருந்த ஆசிரியர் பரமானந்த் மூலம் பகத்தை கல்லூரியில் சேர்த்தார் கிஷன். பரமானந்த் அவர்கள் கர்த்தார் சிங் ,லாலா ஹர்தயால் போன்றவர்களுடன் புரட்சிகர பணியாற்றியவர். சிறைக்கொடுமைகளை அனுபவித்தவர். இந்து மகாசபையிலும் பணியாற்றியவர்.

புரட்சியாளர்களுடன் தொடர்பிலிருந்த பேராசிரியர் ஜெயசந்தர் பகத்சிங்கிற்கு அரசியல் வகுப்பாசிரியர். கல்லூரியில் சுகதேவ் வகுப்புத் தோழனாகிறார். தேசபக்தி, புரட்சிகர போராட்டங்கள் குறித்த கருத்தொற்றுமை உருவாகிறது. மகராணாபிரதாப், சந்திரகுப்தர் நாடகங்களை அவர்கள் அரங்கேற்றுகின்றனர்.

லாலா லஜ்பத்ராய் துவரகாதாஸ் நூலகம் ஒன்றை அமைக்கிறார். நூலக பொறுப்பாளர் ராஜாராம் சாஸ்திரிக்கும் பகத்திற்கும் ஏற்பட்ட நல்லுறவால் அவர் பரிந்துரைத்த புத்தகங்களை படிக்கிறார் பகத். மார்க்ஸ், பகுனின் புத்தகங்கள் அறிமுமாயின, பகுனின் அவரை கவர்கிறார். சோசலிச கோட்பாடுகள் அதற்கான புரட்சிப்போராட்டங்கள் ஆதரிக்கப்பட வேண்டியவை என்ற கருத்திற்கு பகத்சிங் வந்து சேர்கிறார். நூலகத்திற்கு வந்த புதிய புத்தகம் அனார்க்கிசம் கட்டுரைகள் அவருக்கு தரப்படுகிறது. அதில் இடம் பெற்ற வன்முறையும் உளவியலும் பிரஞ்சு அனார்க்கிசவாதி வேலன் அறிக்கையும் அவரை கவர்கின்றன. தொழிலாளி வர்க்கம், தொழிற்சங்கங்கள் குறித்த பதிவையும் பிரஞ்சு சட்டமன்றத்தில் அவரால் வீசப்பட்ட குண்டுகுறித்த பதிவையும் பகத் அறிகிறார்.. சாஸ்திரியிடம் நாமும் இவ்வாறு செயல்படவேண்டும் என்கிறார் பகத். பொது இடங்களில் இப்படிப்பட்ட கருத்துப்பகிர்வு கூடாது என சாஸ்திரி எச்சரிக்கை உணர்வை தருகிறார்.. இப்புத்தகம் 60க்கும் மேற்பட்ட முறை நூலகத்திலிருந்து பகத் பெயரால் பெறப்பட்ட செய்தியை நாம் அறிய முடிகிறது. 1923ல் தனது எப்,ஏ முடிக்கிறார். பின் BA சேர்கிறார்.

வீட்டில் திருமண ஏற்பாடுகள் தீவிரமாகிறது. மறுத்து விவாதிக்கிறார். பெண் படிக்கவில்லை என சொல்லி தட்டிக்கழிக்க பார்க்கிறார். இறுதியில் தனது தேசபக்த கடமை குறித்து எடுத்து சொல்கிறார். பெற்றோரை ஏற்க செய்ய முடியாமையால் வீட்டிலிருந்து பணத்தை எடுத்துக்கொண்டு நிச்சயதார்த்தத்திற்கு முதல் நாள் கடிதம் ஒன்றை வைத்துவிட்டு வெளியேறுகிறார். அக்கடிதத்தில் எனது புனித நூல் நிகழ்வன்று காந்தி நான் நாட்டுக்கு சேவையாற்றுவேன் எனச் சொன்னார். அதை நிறைவேற்ற உறுதி எடுத்துள்ளேன் என குறிப்பிட்டிருந்தார். பெற்றோர்களின் தேடல் முயற்சி பலனளிக்கவில்லை. பண்டிட் ஜோசியர் ஒருவர் திரும்ப பகத் வருவார் ஆனாலும் தொடர்ந்து உங்களுடன் இருக்க மாட்டார் . வித்தியாசமான இவர் ஒன்று நாட்டை ஆள்வார்- இல்லையேல் தூக்கு ஏறுவார் என தன் கணிப்பை சொல்கிறார். தாய் வித்யார்த்தி பெரும் துயர் அடைகிறார்.

பகத்சிங் கான்பூர் சென்று பல்வந்த் சிங் என்ற பெயரில் பத்திரிக்கை பணிகளில் ஈடுபடுகிறார். புரட்சியாளர்களின் வழிகாட்டியாக இருந்த சந்திர சட்டர்ஜி மற்றும் பதுகேஷ்வர் தத், அஜாய் கோஷ், விஜயகுமார் சின்ஹா போன்றவர்களின் தொடர்பு கிடைக்கிறது. பதுகேஷ்வர் வங்க மொழி கற்றுத்தருகிறார். அங்கு பிரதாப் எனும் புகழ் வாய்ந்த பத்திரிக்கையை நடத்தி வந்த கணேஷ் சங்கர் வித்யார்த்தி பல்வந்த் சிங் (பகத்) அழைத்து கட்டுரைகள் எழுத வைக்கிறார். நிருபராக டெல்லி சென்று கலவரங்கள் குறித்து எழுத வைக்கிறார்.. போலீஸ் கண்காணிப்பு தீவிரமாகிறது .கணேஷ் சங்கர் பல்வந்தை அலிகார் பக்கமுள்ள ஷாதிபூர் கிராம தேசிய பள்ளி ஒன்றிற்கு தலைமை ஆசிரியராக அனுப்புகிறார். பகத் அங்கிருப்பதை அறிந்து ஊர் நண்பர்கள் தேடி வருகின்றனர். மாணவர்களை விட்டு பகத் சமாளித்து தான் அவர்கள் தேடிவந்தவர் இல்லை என அவர்களை உணரவைத்து திரும்ப செய்து விடுகிறார். பின்னர் தந்தையிடமிருந்து தொடர்ந்து வந்த உறுதி மொழிகளால் 6 மாதம் கழித்து வீடு திரும்புகிறார்.

ஊர் திரும்பியதும் அகலி இயக்க புரட்சிகர நடவடிக்கைகளில் ஈடுபடுகிறார். மத நடவடிக்கைகளில் நடக்கும் ஊழல் தடுப்பதற்கு போராடுகிறார். பிரிட்டிஷாரின் இந்த தாக்குதலில் 200 சீக்கியர்கள் பலியாகின்றனர். கர்த்தார் சிங், ஜ்வாலா சிங் தலைமையில் கிராமந்தோறும் இயக்கங்கள் எழுகின்றன. கிஷன் தனது பகுதியில் அவர்களை வரவேற்கமுடியாத சூழலை உறவினர் உருவாக்குகின்றனர். பகத் அனைத்து உதவிகளும் செய்ய முன் வருகிறார் அப்பகுதியினரை ஆதரவுக்கு திரட்டுகிறார். இதனால் கைது செய்யப்படலாம் என அறிந்த பகத் டெல்லி செல்கிறார். தைனிக் அர்ஜுன் பத்திரிகை பணிகளில் ஈடுபடுகிறார். அங்கும் பல்வந்த் சிங் என்றே அறியப்படுகிறார்.

கான்பூரில் வெள்ளம் என அறிந்து நிவாரணப்பணிகளில் ஈடுபட செல்கிறார். அப்போதுதான் சந்திரசேகர் ஆசாத்தை சந்திக்க உரையாட வாய்ப்பு கிட்டுகிறது. அவரிடம் வசீகரிக்கப்படுகிறார். பின்னர் லாகூர் திரும்பி ஒத்த புரட்சிகர சிந்தனையுள்ள இளைஞர்களை சேர்க்கிறார். பகவதிசரண் வோரா, அவர் துணைவியார் துர்கா உதவியுடன் பாரத் இளைஞர் மன்றம் 1926ல் துவக்கப்படுகிறது. லெனின் புத்தகங்களை படித்த பின்புலத்தில் அவரின் கொள்கைகளை அடியொற்றி மன்றத்தின் நோக்கம் வெளிப்படுத்தப்படுகிறது. விவசாயி- தொழிலாளரை திரட்டுவது என்பது பேசப்படுகிறது. சாதி மத உணர்வுகளுக்கு அப்பாற்பட்ட தேசபக்தி முன் வைக்கப்படுகிறது. புரட்சியாளர் கர்த்தார்சிங் சிலை நிறுவப்படுகிறது. இன்குலாப் ஜிந்தாபாத் மாபெரும் முழக்கமாகிறது.

லாகூர் ரகசிய புரட்சிகரகுழுவில் முக்கிய தோழர்களாக சந்திரசேகர் ஆசாத், பகத் ராம்பிரசாத் பிஸ்மில், ரஜிந்தர் லாஹிரி, அஷ்வகுல்லாகான், பதுகேஸ்வர் தத் செயல்பட்டுவந்தனர். தங்களது நடவடிக்கைகளுக்கு நிதி கிடைப்பதில் உள்ள சிரமங்களை தீர்த்திடும் வகையில் அரசாங்க நிதியை கொள்ளையிடுவது என முடிவெடுத்தனர். ஆக 9 1925 லக்னோவிற்கு மிக அருகாமை ககோரியில் தங்கள் இடுப்பு துப்பாக்கிகளுடன் அரசாங்க நிதி ரூ8600யை கொள்ளயிட முடிந்தது. ஆனால் அதற்கு அவர்கள் பெரும் விலை கொடுக்க வேண்டியதானது. பல புரட்சியாளர்களுடன் பிஸ்மில்லும் கைதானார். ராம்பிரசாத் பிஸ்மில், ரஜேந்திரலாஹிரி, அஷ்வகுல்லா, ரோஷன்சிங் ஆகிய தோழர்களுக்கு மரணதண்டனை விதிக்கப்பட்டது.. அவர்களை தப்பவைத்து மீட்டிட பகத், ஆசாத், சுகதேவ், ராஜகுரு, பதுகேஷ்வர் முயற்சிகள் பலனளிக்கவில்லை. நான்கு புரட்சியாளர்களும் தூக்கு கயிற்றில் வீரமரணம் அடைந்தனர்.

1927ல் தசரா விழாவின் போது பொது இடத்தில் எவரோ குண்டு வீச மக்கள் மரணித்தனர். பகத்சிங்கிற்கு கைது உத்தரவு பிறப்பிக்கப்படுகிறது. அமிர்தசரஸ் சர்தோல் சிங் வீட்டில் பகத் மறைகிறார். தனது கைத்துப்பாக்கியை அங்கு விட்டு திரும்ப எடுக்க வருகையில் கைதாகி லாகூர் சிறையில் அடைக்கப்படுகிறார். காக்கோரி குறித்த விசாரணை சித்திரவதை நடந்தேறுகிறது . அவரை பிணையில் விடுவிக்க ரூ 60000 என்கிறது பிரிட்டிஷ் நீதிமன்றம். மிகக்கடுமையான முயற்சிக்கு பின்னர் ரூ 60000 கட்டி ஜாமீனில் பகத் அவரது தந்தையால் பிணையில் எடுக்கப்படுகிறார். உடனடியாக புரட்சிகர நடவடிக்கைகளில் ஈடுபட முடியாத சூழல் பகத்திற்கு ஏற்படுகிறது.

குடும்பம் கறவை மாடுகளை வாங்கி பால்பண்ண ஒன்றை நிறுவுகிறது. பகத்சிங் அதன் மேலாண்மை பொறுப்பேற்கிறார். கடும் உழைப்பை நல்குகிறார். ஆனால் விரைவில் பால்பண்ணை இரவில் புரட்சியாளர்களின் சந்திப்பு கூடமாகிறது. பஞ்சாப் சட்டமன்றத்தில் திரு கோபி சந்த் பார்கவா என்பார் மூலம் இப்பிரச்சனை எழுப்பப்பட்டு, பகத்சிங் மீதான

பிணை நிதி நியாயமற்றது என நிறுவப்பட்டது. ரூ 60000 அவரது குடும்பத்தாரிடம் திரும்பத் தரப்பட்டது. பகத்சிங் தான் இனி சுதந்திர பறவை எனக் கருதலானார்.

செப்8, 1928ல் ஃபெரோஷா கோட்லாவில் பகத், சுகதேவ், குந்தன்லால், சிவ வர்மா, ஜெயதேவ் குப்தா, விஜய் குமார் சின்ஹா போன்ற புரட்சியாளர்கள் கூடினர். பகத்சிங் அக்கூட்டத்தில் பல்வேறு மாநில பிரதேசங்களிலுள்ள புரட்சிகர குழுக்கள் இணைந்து செயலாற்ற வேண்டிய அவசியம் உள்ளது என்பதை தெரிவித்தார். நாம் 'ஹிந்துஸ்தான் சோசலிச குடியரசு அசோசியேசன்' என்ற அமைப்பின் பெயரால் இயங்கலாம் என அறிவித்தார். ஆசாத் பங்கேற்க முடியாவிட்டாலும் அவர் சேர்மன் என்றும், பஞ்சாப் பிரிவு பொறுப்பில் சுகதேவ், ராஜஸ்தான் பிரிவு குந்தன், உத்தர பிரதேச பிரிவிற்கு சிவ வர்மா, பீகார் ஃபனிந்திர நாத் புரட்சிகர நடவடிக்கைகளுக்கு பொறுப்பாக்கப்பட்டனர். அனைத்து பிரதேச ஒருங்கிணைப்பு பொறுப்பிற்கு பகத், விஜயகுமார் நியமிக்கப்பட்டனர். அரசு வங்கி கொள்ளை என்பதும் முடிவானது.

நவம்பர் 8, 1927ல் அமைக்கப்பட்ட சைமன் கமிஷன் எதிர்த்து பெரும் போராட்டங்கள் எழுந்தன. சைமன் சென்ற எல்லா பெரு நகரங்களிலும் 'திரும்பி போ' என்கிற வீச்சான போராட்டங்கள் நடந்தன. சென்னை துப்பாக்கி சூட்டில் மூவர் பலியாயினர் லாகூருக்கு வரும்போது குண்டெறிய வேண்டும் என்கிற பகத்சிங் ஆலோசனையை அசோசியேஷன் ஏற்கவில்லை.

லாலா லஜ்பத்ராயுடன் போராட்டத்தில் பகத்சிங் பங்கேற்கிறார். லாலா லஜ்பத்ராயை பாதுகாக்கும் வகையில் புரட்சியாளர்கள் சுற்றி நின்றனர். போலீஸ் கமிஷனர் ஸ்காட் குண்டாந்தடி தாக்குதலுக்கு ஆணையிடுகிறார். சூப்பரிடெண்ட் சாண்டர்ஸ் தலைமையில் தாக்குதல் நடக்கிறது லாலா லஜ்பத்ராய் தோள்பட்டையிலும் தலையிலும் தாக்கப்படுகிறார். போலீசாரின் மிருகத்தனமான தாக்குதலையடுத்து இரத்தம் சொட்டும் நிலையில் லஜ்பத்ராய் போராட்ட நிறுத்தம் என அறிவிக்கிறார். பகத் தன் மீதான தாக்குதலை பொறுத்து சகித்து. கொள்கிறார். 144 தடை போடப்படுகிறது. மீறி திரண்ட மக்களிடையில் என் மீதான அடி பிரிட்டிஷாருக்கு விழ இருக்கும் சாவு மணி என லஜ்பத்ராய் உரையாற்றுகிறார்.. உடல்நலம் பாதிக்கப்பட்டு நவம்பர் 17, 1928ல் அவர் மறைகிறார்.

டிசம்பர் 10, 1928ல் அசோசியேஷன் கூடி ஸ்காட் போலீஸ் அதிகாரியை கொன்று பழி தீர்ப்பது என முடிவெடுக்கிறது. ராஜகுரு போலீஸ் நிலையத்திற்குள்ளேயே அவனை கொல்ல அனுமதி வேண்டும் என்கிறார். ஆசாத் அறிவுரைக்குப் பின்னர் பொருத்தமான நேரத்திற்காக புரட்சியாளர்கள் காத்திருந்தனர். டிசம்பர் 17 அன்று

காவல்நிலையத்திலிருந்து வெளிவந்த போலிஸ் அதிகாரி ஜான் சாண்டர்ஸை ராஜகுரு தலையில் சுடுகிறார். பகத் தொடர்ந்து சுடுகிறார். ஆசாத் உள்ளிட்ட அனவரும் தயானந்தா கால்லூரி நோக்கி ஓடி தப்புகின்றனர். பகத்தை பிடிக்கவந்த சந்தன் சிங் என்கிற போலீஸ்காரர் ஆசாத்தால் சுடப்படுகிறார். அருகாமையில் இருந்த சைக்கிளில் ஏறி தப்புகின்றனர்.

சாண்டர்ஸை ஜேம்ஸ் ஸ்காட் என நினைத்து கொன்றாலும் தோழர்கள் கடமையை செய்ததாக கருதினர். 'மனசாட்சியற்ற அடக்குமுறை அரசே ஜாக்கிரதை' என துண்டறிக்கைகள் வெளியிடப்பட்டன. நாங்கள் ஒரு மனிதரை கொன்றுவிட்டோமே என வருந்தினாலும் இக்கொடும் அரசாங்கத்தின் பிரதிநிதி அவர் என அறிக்கை போராளிகளின் செயலை நியாயப்படுத்தியது.. என்ன செய்வது புரட்சி இரத்தம் சிந்துதலை கோருகிறது என அவர்கள் தெரிவித்திருந்தனர்.

போலீசாரிடமிருந்து தப்பிக்க சுகதேவுடன் திட்டமிட்டார் பகத்சிங். பகவதி சரண் துணைவியார் துர்கா மற்றும் மகன் சசீந்திரன் பகத்சிங் குடும்பம் ஆகவும் ராஜகுரு வேலையாள் எனவும் வேடமிட்டு 40 மணி ரயில் பயணத்தில் கல்கத்தா தப்பினர். கைச்செலவிற்கு துர்கா குடும்ப பணத்தை தந்து உதவினார். காங்கிரஸ் மாநாட்டில் பகத்சிங் பங்கேற்றார் எனவும் அவர் பகல் பொழுதில் வெளியிலேயே செல்லவில்லை எனவும் முரண்பட்ட இருவித தகவல்கள் நிலவுகின்றன.. அனுசீலன் சமிதி தலைவர் பிரதுல் சந்திர கங்குலியுடன் பகத்சிங் சந்தித்து இரு ரிவல்வார்களை பெறுகிறார். பின்னர் வெடிகுண்டு செய்வதில் தேர்ச்சியானவர் என அறியப்பட்ட யதிந்திர நாத் அவர்களை இரகசியமாக பகத் சந்திக்கிறார். அதன் பின்னர் ஆக்ரா செல்கிறார் பகத்.

ஆக்ராவிலும், லாகூரிலும் வெடிகுண்டு தயாரிக்கும் நடவடிக்கைகளில் புரட்சியின் தோழர்கள் இறங்கினர். பொது பாதுகாப்பு மசோதா, தொழிற் தகராறு மசோதாக்களை கொண்டுவர பிரிட்டிஷ் தீவிரமாக இருந்தது. மசோதா மத்திய சட்டமன்றத்தில் கொண்டுவரும் நாளில் குண்டெறிவது என்கிற பகத்சிங் ஆலோசனை ஏற்கப்பட்டது. பகத்சிங் வெளியே இருப்பது அமைப்பிற்கு தேவை என்றும் பதுகேஷ்வரும், விஜய் சின்ஹாவும் சட்டமன்றத்திற்குள் குண்டெறிவது என்றும் அமைப்பு முடிவெடுத்தது. துண்டறிக்கைகள் மூலமல்ல நமது வாழ்வை தியாகம் செய்வதே பெரும் பிரச்சாரமாகவும் விழிப்புணர்வை உருவாக்குவதாகவும் அமையும் என பகத்சிங் கருதினார். அசெம்பிளிக்கு நுழைவு அனுமதி பெறுவதற்கான ஏற்பாட்டை ஜெயதேவ் கபூர் செய்தார். ஜெயதேவ் ஆராய்ச்சி மாணவராக நடித்து இதை வெற்றிகரமாக்கினார்.

1929 ஏப்ரல் 8 அன்று சட்டமன்றம் கூடியது. மோதிலால் உட்பட தலைவர்கள் இருந்தனர். மசோதாக்கள் அறிமுகம் துவங்கியவுடன் பதுகேஷ், பகத் இருவரும் குண்டுகளை யாருக்கும் காயம் ஏற்படாதவாறு எறிந்தனர். பதட்டம் பரவியது. அனைவரும் ஓடத்துவங்கினர். மசோதா தாக்கல் செய்த ஜான் ஷீஸ்டர் மேசைக்கு கீழே பதுங்கி கொண்டார். தோழர்கள் இன்குலாப் முழக்கமிட்டனர். துண்டறிக்கைகள் மசோதாக்கள் கொடும் அடக்குமுறைக்கானவை என்பதை சுட்டிக் காட்டி வெளியிடப்பட்டது. புரட்சிகர சிந்தனைகளை உலகில் யாராலும் அழிக்க முடிந்ததில்லை. சிலர் இரத்தம் சிந்தி புரட்சியை அரங்கேற்றுவதன் மூலம் மனித குலம் சுரண்டலை ஒழிக்க முடியும் என்றது அறிக்கை. இருந்த இடத்தில் அமைதியாக மோதிலால், ஜின்னா, மாளவியா, விதல்பாய் படேல் அமர்ந்திருந்தனர். சில போலிசார் முன்னேறி வந்தனர். பகத்சிங் துப்பாக்கிகளை கீழே வைத்துவிட்டு கைதாக தயார் என்பதற்கான செய்கைகளை காட்டினார். இருவரும் கைதாகி சிறையில் அடைக்கப்பட்டனர்.

தனது தந்தை தன்னைக் காண முயற்சி செய்கிறார் என்பதறிந்து ஏப்ரல் 26, 1929ல் பகத் டெல்லி சிறையிலிருந்து கடிதம் எழுதுகிறார். கவலைப்படவேண்டாம். மரியாதையாக நடத்துகிறார்கள். பார்க்க வரும்போது கீதா ரகஸ்யம், நெப்போலியன் புத்தகம், நாவல்கள் எடுத்து வருமாறு எழுதுகிறார். அதே நேரத்தில் தன்னை வெளிக்கொணர காட்டும் முயற்சிகள் அவசியமற்றது என தெளிவுபடுத்துகிறார். கொலை முயற்சி , குண்டு வெடிப்பு செக்‌ஷன்கள் அவர்கள் மீது போடப்பட்டிருந்தது. குண்டெறிந்தது உண்மை.. சாட்சிகள் தவறாக ஜோடிக்கப்பட்டவை என பகத்சிங் வாதாடினார். மனிதகுலத்தை தாங்கள் அளவு கடந்து நேசிப்பதாகவும், உழைக்கும் மக்களை அரசின் தாக்குதலிருந்து காப்பாற்றவேண்டியே இந்நடவடிக்கை. நாங்கள் எவரையும் கொல்ல நினக்கவில்லை என்றார் பகத். வாணவேடிக்கை விட்டீர்களா என அரசு தரப்பு கேலி பேசியது. ஆம் வாணவேடிக்கை எங்கள் வாழ்க்கையுடன்தான் என சீற்றத்துடன் பகத்சிங் பதில் அளித்தார் என அறியமுடிகிறது. எங்களது புரட்சிகர நம்பிக்கை அற்பமானதல்ல என அனைவரும் அறியவேண்டும் என்றார். புரட்சி என்பதை அழிவாக நாங்கள் கருதுவது இல்லை. மறுகட்டுமானம் என்றே பார்க்கிறோம் என்றார் பகத்சிங். நீதிமன்ற வாதங்கள் முடிந்து ஜூன் 12, 1929ல் 140 பக்க தீர்ப்பு வழங்கப்படுகிறது. தீர்ப்பில் ஆயுள்தண்டனை என்றனர். பகத், பதுகேஷ்வர் இன்குலாப் முழக்கமிட்டனர்.

சிறைக்கைதிகளுக்கு நேரும் அவலங்களை, கொடுமைகளை கண்டித்து லாகூர் சிறையில் ஜூன்14, 1929 முதல் பட்டினிப் போரை தோழர்கள் மேற்கொள்கின்றனர்... சுகதேவ், ராஜகுரு, யதிந்திரர், ஜெயதேவ், அஜாய்கோஷ், சிவ வர்மா அச்சிறையில் பகத்துடன் பட்டினிப்போரில் ஈடுபடுகின்றனர். மூத்த போராளி பாபா சோகன் சிங் சிறையில் 1915 முதலே இருந்து வந்தார். சாண்டர்ஸ் கொலை வழக்கும் நடக்க துவங்கியது. மருத்துவப்

படுக்கையிலேயே பட்டினி பலவீனத்துடன் பகத், பதுகேஷ்வர் இருவரையும் நீதிமன்றம் அழைத்துச் செல்கின்றனர். தேசபக்தர்களுக்கு கைவிலங்கு போடப்படுவதை எதிர்க்கிறார் பகத்.

பட்டினியால் யதிந்திரர் இரத்த ஓட்டம் நின்றது. கை கால் விளங்காமல் போனது. போராட்டத்தை நிறுத்தினால் யதிந்திரரை விடுதலை செய்யலாம் என்றது சிறை நிர்வாகம். பகத் போராட்டத்தை நிறுத்தி யதிந்திரரை காக்க விரும்பினார். சிறை நிர்வாகம் ஏமாற்றுவதாக உணர்ந்த பகத்சிங் தனது பட்டினிப்போரை நீட்டிக்கிறார். செப் 13 அன்று யதிந்திரரை மரணம் கவ்வியது. இந்திய விடுதலைபோரின் மகத்தான தியாக வரலாற்று நாளாக அந்நாள் மாறியது.

யதிந்திரர் தியாகம் சிறை சீர்திருத்த பரிந்துரைகளை அரசாங்கும் ஏற்கும் சூழலை உருவாக்கியது. 114 நாட்களுக்கு பின்னர் அக் 5,1929ல் பகத் தனது பட்டினிப்போரை முடித்துக் கொண்டாதாக நாம் அறிய முடிகிறது. சாண்டர்ஸ் வழக்கில் 24 பேர் குற்றவாளிகளாக ஆக்கப்பட்டனர்.. பகத், சுகதேவ், ராஜகுரு, பதுகேஷ்வர், கமல்நாத் திவாரி, கிஷோர்லால், சிவ வர்மா, அஜாய்கோஷ், குந்தன்லால் போன்றவர்கள் கைது செய்யப்பட்டிருந்தனர். ஆசாத், பகவான் தாஸ், பகவதி வோரா போன்றோர் தலைமறைவாய் இருந்தனர். ஜெய்கோபால், மன்மோகன் பானர்ஜி, லலித் முகர்ஜி போன்றவர் அரசு தரப்பு சாட்சிகளாக மாறிப்போயினர். செப் 12 1929ல் நீதிபதிகளுக்கு கட்டற்ற அதிகாரம் தரக்கூடிய மசோதா ஒன்றை- குற்றம் சாட்டப்பட்டவர்களை பார்க்காமல் கூட வழக்கு நடத்திட அதிகாரம் தரும் மோசமான மசோதா ஒன்றை கொணர்ந்தனர். மோதிலால்நேரு இதைக் கடுமையாக எதிர்த்தார்.

இர்வின் பிரபு மூவர் விசாரண கமிட்டி ஒன்றை லாகூர் சதி வழக்கிற்காக மே 1. 1930ல் அமைத்தார். இதை சட்ட விரோதமானது என பகிஷ்கரிக்க பகத்சிங் முடிவெடுத்தார். பின்னல் தோழர்கள் அறிவுரைப்படி லாலா துனிசந்த் என்பவர் தனக்கு வாதாட ஒப்புதல் தருகிறார். மே 12, 1930ல் இன்குலாப் முழக்கத்துடன் விசாரணக்கூடத்திற்கு புரட்சிகர தோழர்கள் வருகின்றனர். அவர்கள் போலீஸ்காரர்களால் அங்கு தாக்கப்படுவதை கண்டிக்கும் வகையில் மூவர் கமிட்டியில் ஒருவரான அகாஹைதர் நீதிமன்றத்திலிருந்து வெளியேறுகிறார். தனது மாறுபட்ட கருத்தையும் பதிவு செய்கிறார். ஆகஸ்ட் 26, 1930ல் வழக்கு முடிவிற்கு வருகிறது.

செப்டம்பர் 25ல் பகத் தாயார் பார்க்க விரும்பி சிறைச்சாலை வருகிறார். ஆனால் விதிகளின்படி சந்திப்பு மறுக்கப்படுகிறது. தீர்ப்பிற்கு பிறகு பார்க்க வாய்ப்பிருக்கலாம் கவலை வேண்டாம் என ஆறுதல் கடிதம் எழுதுகிறார் பகத்சிங். மரணதண்டனை

விதிக்கப்படலாம் என்பதால் தந்தை கிஷன் வைஸ்ராய்க்கு சாண்டர்ஸ் கொலை நடந்த அன்று பகத் லாகூரில் இல்லை, கல்கத்தாவில் இருந்தார் எனக் கடிதம் எழுதுகிறார். இதை அறிந்து கடுமையான வருத்தமடைந்த பகத்சிங் கோபத்துடன் தந்தைக்கு கடிதம் எழுதுகிறார். அரசியல் போராளிகள் சுயநலமற்றவர்களாக இருக்கவேண்டும். அரசியல் தன்மையில் மட்டுமே தற்காப்புகள் கூட அமைய வேண்டும். இதை வேறு எவராவது செய்திருந்தால் அவரை நான் துரோகி என் சொல்லியிருப்பேன் . இதுபோன்ற பலவீனங்கள் கூடாது என எழுதுகிறார். இக்கடிதம் பத்திரிகைகளுக்கு அவர் வேண்டுகோள்படி தரப்படுகிறது.

அக்டோபர் 7, 1930 அன்று தீர்ப்பாய பிரதிநிதி சிறைச்சாலை வந்து தீர்ப்பின் 68பக்க நகலை வாசிக்கிறார். பகத்சிங், ராஜகுரு, சுகதேவ் மூவருக்கும் மரணதண்டனை என்பது படிக்கப்படுகிறது. அதிர்ச்சி நிலவுகிறது. மூவரும் புன்முறுவல் செய்கின்றனர். இன்குலாப் முழக்கம் இடுகின்றனர். மற்றவர்களுக்கு கால வரையுடன் கூடிய தண்டனைகள் விதிக்கப்பட்டன. பின்னாளில் சி பி அய் பொதுச்செயலராக வந்த பகத்சிங் புரட்சிகர குழுவில் அன்றிருந்த அஜாய் கோஷ் அவர்களுக்கு 3 ஆண்டுகள் என அறிவிக்கப்படுகிறது. நாடு முழுதும் இளைஞர்களின் போராட்டங்கள் எழுகின்றன. தீர்ப்பை கண்டித்து பொது கூட்டங்கள் சென்னை உட்பட பெரு நகரங்களில் நடக்கின்றன. ஆயுள் தண்டனை பெற்ற பதுகேஷ்வர் தீர்ப்பறிந்து மனநிலை பாதிக்கப்படுகிறார். ஆயுள் தண்டனை 'குறைவான தியாகம்' என கருத வேண்டியதில்லை. சாவிலிருந்து தப்பிக்க வாய்ப்புள்ள புரட்சியாளர்கள் சகல துயர்களையும் சந்தித்து கொள்கைக்காக நிற்பவர்கள் என மக்களிடம் காட்ட வாய்ப்பு என புரிந்து கொள் என அவருக்கு பகத்சிங் கடிதம் எழுதுகிறார்.

பிரைவி கவுன்சிலுக்கு அப்பீல் என்பதில் பகத்திற்கு மனம் ஒப்பவில்லை. தண்டனையை மாற்றி ஆயுள் தண்டனை என ஆக்கிவிட்டால் என்ன செய்வது என்பதற்காக வேறுவகை வேண்டுகோள் ஒன்றை முன்வைத்து கடிதம் தந்தனர். நாங்கள் போராடுகிறோம். தொடர்ந்து போராட்டங்கள் இருக்கும். இன்றுள்ள சமுக அமைப்பு இற்று வீழும்வரை உக்கிரமான போராட்டங்கள் எழும். எங்களுக்கு எந்த சலுகையும் தேவையில்லை. யுத்த கைதிகள் எனில் ராணுவத்தை கொணர்ந்து சுட்டு வீழ்த்துங்கள என மூவரும் எழுதினர். கவுன்சில் இதை நிராகரித்தது.

மார்ச்4 1931ல் காந்தி –இர்வின் ஒப்பந்தம் வருகிறது. ஒத்துழையாமை போராட்டக்காரர்கள் விடுதலை விவாதிக்கப்படுகிறது. வன்முறையில் ஈடுபடாதவர் விடுதலை பேசப்படுகிறது. மார்ச் 5 1931 பத்திரிகை செய்தி வருகிறது. அதில் காந்தி வன்முறையில் ஈடுபட்டவர்களையும் அரசாங்கம் சிறைக்கொட்டடியில் வதைப்பது என்பதை தனிப்பட்ட

முறையில் ஏற்கவில்லை என்றாலும் சட்டத்திற்கு புறம்பாக தன்னால் ஏதும் செய்வதற்கில்லை என்றார்.

கிஷன் குடும்பத்தார் பகத்தை இறுதியாக பார்ப்பதற்கு மார்ச் 3, 1931ல் வந்தனர். பாட்டனார் சர்தார் அர்ஜுன், பாட்டி ஜெய் கெளர் உடன் வந்தனர். தனது உடலை சுமந்து பகத்சிங் அடக்கம் செய்யவேண்டும் என்ற விழைவு தாத்தாவிற்கு இருந்தது. வாழ்வின் இன்பம் எதையும் துய்க்காமல் பேரன் மரணிக்கப்போவது மூத்தவருக்கு பெரும் துக்கமாகியது. பகத்சிங் ஆறுதல் கூறினார். எனது வாழ்வு பயனுள்ளதாக இருந்திடவேண்டும் என நீங்கள் அனைவரும் சொன்னபடிதானே நடந்துள்ளது, உண்மையின் பக்கம் நாம் நிற்போம் என்றார் பகத்.

வித்யாவதி உன்னை மகனாக அடைந்தது பெரும் பேறு என்றார். நீ அடையும் மரணம் மேலான ஒன்று. தூக்கு மேடையிலும் இன்குலாப் முழக்கமிட்டு நாட்டு மக்களை தட்டி எழுப்பு என்றார் தாயார். மிகுந்த மன உறுதியுடன் மரணத்தை நான் எதிர்கொள்வேன் என்றார் பகத். எனது மரணம் பல பகத்சிங்குகளை உருவாக்கும் என்றார். தந்தையிடம் நான் தங்களை காயப்படுத்திவிட்டேன் மன்னிக்கவேண்டும் என்றார். உன்னை எண்ணி பெருமிதம் அடைகிறேன் என்றார் தந்தை. நான் வாழ்வது என்பதைவிட எனது மரணம் அதிகம் பேசும். ஹிந்துஸ்தான் புரட்சிகர கட்சி என்பதுடன் நான் இறண்டற கலந்துவிடுவேன். என்னைவிட அதிர்ஷ்டசாலி யாராக இருக்கமுடியும். என்னைக் குறித்து எனக்கு பெருமிதமே என்றார் பகத்.

மார்ச் 24 1931ல் தண்டனை நிறைவேற்றம் என இருந்தது. கடுமையான போராட்டங்கள் எழலாம் என அரசாங்கம் அறிந்து முதல் நாள் மார்ச் 23 அன்றே தூக்கை நிறைவேற்றும் வகையில் கடைசி விருப்பம் கேட்கப்பட்டது. அம்மா சமைத்த உணவு என்றார் பகத். விழித்த வார்டனிடம் கவலை வேண்டாம் இங்குள்ள போகா என்கிற கழிப்பறை சுத்தம் செய்யும் தொழிலாளியைத்தான் அவர் அம்மா என குறிப்பிடுவதாக தெரிவித்தார். கண்ணீர் மல்க தயங்கிய அத்தொழிலாளியை தனக்கு உணவு சமைக்க சம்மதிக்க வைத்தார் பகத்.

மார்ச் 23 அன்றுதான் லெனின் புத்தகத்தை பகத் படித்துக்கொண்டிருந்தார். முடிக்க விரும்பினார். இன்குலாப் முழக்கம் கேட்க துவங்கியது. தலைமை வார்டன் சர்தார் சத்தார் சிங் முடிவு வந்துவிட்டது மகனே என்றார். எப்போது அந்த அதிர்ஷ்ட நிமிடம் என்றார் பகத். இன்று மாலை என்றனர். என்னை படைத்தவனை சந்திக்கும் நேரம் வந்துவிட்டது என்றார். பிரார்த்தனை செய் மகனே என்றார் வார்டன். உங்கள் உணர்வை மதிக்கிறேன். நீங்கள் முன்னதாக தெரிவித்திருக்க வேண்டாமா என்றார் பகத்சிங். மாலை 3 மணிக்கு தான்

உறுதி செய்தனர் என்றார் வார்டன். கடைசி நேரத்தில் நான் இறைவனை பிரார்த்தித்தால் அவர் என்னை கோழை என நினைத்து விடுவார் என்றார் பகத்.

எங்களை சங்கிலியால் பிணைக்காமல் முகத்தை மூடாமல் தூக்கிலிடுங்கள் என்றனர் போராளிகள். சங்கிலிகள் விடுவிக்கப்பட்டன. மூவரும் கைகளை பற்றிக்கொண்டனர். சேர்ந்து பாடினர். இன்குலாப் முழக்கம் எதிரொலித்தது. சிறைச்சாலையில் மற்றவர் இத்துயர் கண்டு கண்ணீர் விட்டனர். முகமது அக்பர் என்கிற வார்டன் சங்கிலி இல்லாததால் ஆபத்து ஏதுமில்லை என துணை கமிஷனரிடம் கூறினார். மாஜிஸ்ட்ரேட் அவர்களே இந்திய புரட்சிகாரர்கள் எவ்வாறு இருக்கிறோம் என பார்க்க உங்களுக்கு கொடுத்து வைத்திருக்கிறது என்றார் பகத்சிங். இன்குலாப் ஜிந்தாபாத்- ஏகாதிபத்தியம் வீழட்டும் என ஒருசேர மூவரும் முழக்கமிட்டனர். இரவு 7.33க்கு கயிறு இறுக்கப்பட்டது. முன்னதாக எனது கயிறை சரியாக பொருத்துவீர் என்றார் பகத்.

மோரி சிறைச்சாலைக்கு மூவர் குடும்பமும் வந்திருந்தது. மக்கள் திரளாக கூடியிருந்தனர். ஆனால் முதல் நாள் இரவே முடிந்து விட்டது என்பதை அறிந்தனர். தந்தை கிஷன் அதை கூட்டத்தாரிடம் தெரிவித்தார். அவர்களால் உடல்களை பெறமுடியவில்லை. இறுதி சடங்கு முடிந்துவிட்டதாக சிறை அதிகாரிகள் தெரிவித்தனர். குழப்பம் நிலவியது. சாக்குப் பைகளில் மாவீரர்கள் கிடத்தப்பட்டு எடுத்துச் செல்லப்பட்டனர் என்ற செய்தி துக்கப்படுத்தியது. லாகூரிலிருந்து 70 மைல்கள் தாண்டி ஃபெரொஷ்பூர் என அறிந்து குடும்பத்தார் விரைந்தனர். அங்கு செய்தி அறிந்து மக்கள் கூடினர். சட்லஜ் நதிக்கரை ஓரம் நெருப்பு எரிவதை பார்த்து மக்கள் கூடினர். மக்கள் வருவதை அறிந்து நெருப்பை அணைத்துவிட்டு போலீசார் மறைந்தனர். வந்தவர்களால்மண்ணெண்ணை நெடியை நுகர முடிந்தது.

அரசாங்கம் சீக்கிய, இந்து மதப்படி சடங்குகள் நடந்து சாம்பல் கரைக்கப்பட்டதாக செய்தி வெளியிட்டது. ராம்பிரசாத் பிஸ்மில் நாங்கள் சுதந்திரம் பெறுவோம் .புரட்சியாளர்கள் சிதையுண்ட பூமிக்கு மக்கள் குவிந்து வருவார்கள் தியாகம் போற்றுவார்கள் என்றார். மார்ச் 24 1931 துக்க நாளாக போராட்டக்காரர்களால் அறிவிக்கப்பட்டது. 23 கோடி இந்தியர்கள் இன்னும் இருக்கிறோம். போராடுவோம் என பத்திரிக்கை செய்திகள் வெளியாயின.

பாட்டாளிவர்க்க சர்வாதிகாரம் என்பதில் அன்றிருந்த கம்யூனிஸ்ட்களைப் போலவே பகத்தும் நம்பிக்கை வைத்திருந்தார். சோசலிச புரட்சி என பேசிவந்தார். கம்யூனிஸ்ட் அகிலம் வாழ்க எனக் கூட முழங்கினார். ஆனாலும் அவர் கம்யூனிஸ்ட் கட்சிக்குழுக்களில் சேர்ந்து ஏன் செயலாற்றவில்லை என்பது குறித்து ஏராள விவாதங்கள் நடந்து

வருகின்றன. தான் தனிநபர் பயங்கரவாதி அல்ல என தெளிவு படுத்த முயன்றார். தங்களை விடுதலைப் போரின் இராணுவப்பிரிவாக புரிந்து கொள்ளவேண்டும் என்றார்.

புத்தக வாசிப்பையும் அறிவு பெருக்கத்தையும் நேசித்தவர் அவர். அவரும் தோழர்களும் படித்த நூற்றுக்கணக்கான புத்தக பட்டியல் கூட வெளியாகியுள்ளது. நான் ஏன் நாத்திகன் ஆனேன் உட்பட ஏராள கட்டுரைகளை எழுதியவர் பகத். பகுனின், மார்க்ஸ், லெனின், ட்ராட்ஸ்கி எழுத்துக்களுடன் தொடர்பு இருந்தது. அனார்க்கிசம் குறித்து கட்டுரைகள் எழுதினார், அனார்க்கிசம் என்றால் அலர்ஜி ஆகவேண்டாம் நமது வசுதேவ குடும்பகம்தான் அது எனக்கூட எழுதியுள்ளார்.. அவரது சிறை குறிப்புகள் வெளியாகியுள்ளன. அதில் ஏங்கெல்ஸ் குடும்பம், தனிசொத்து அரசு நூலிலிருந்தும், லெனினின் ஏகாதிபத்தியம் முதலாளித்துவ உச்சகட்டம் குறிப்புகள் ட்ராட்ஸ்கி புரட்சி பற்றிய குறிப்புகள், கம்யூனிஸ்ட் அறிக்கை குறிப்புகள் காணப்படுகின்றன. ,

பிரிட்டிஷார் போனபின்னர் இந்தியர்களே ஆள வந்தாலும் சுரண்டல் தொடர்ந்தால் தங்கள் போர் ஓயாது என்ற கருத்தை பகத்சிங் எழுத்துபூர்வமாக வெளிப்படுத்தினார். இர்வின் பிரபுவிற்கு பதிலாக புருஷோத்தம் டாக்கூரோ, தேஜ் பகதூர் சாப்ருவோ வருவதால் சுரண்டல் பிரச்சனை தீர்ந்துவிடப்போவதில்லை என வெளிப்படையாக எழுதியவர் பகத். காந்தியின் அகிம்சை மற்றும் சமரசம் குறித்த விமர்சனங்களையும் தனது எழுத்துக்களில் அவர் வெளிப்படுத்தினார்.

பகத் தனது கட்டுரைகளை வித்ரோகி (கலகக்காரன்), அக்யாட் (அறியப்படாதவன்) சைனிக் (இராணுவவீரன்) என்ற பெயர்களில் எழுதி உள்ளதாக அறிய முடிகிறது. பகத்சிங்கின் ஆவணங்கள் என 100க்கும் மேற்பட்டவைகள் பட்டியிலப்படுகின்றன. அவர் 11 வயது துவங்கி எழுதியவையாக அவை உள்ளன. குடும்பத்தினருக்கு, நண்பர்களுக்கு புரட்சிகரத் தோழர்களுக்கு எழுதிய கடிதங்கள் என்ற வகையில் பல அமைந்துள்ளன. அரசியல் கடிதங்கள் அவரின் இறுதி 4 ஆண்டுகளில் எழுதப்பட்டுள்ளன.

பகத்சிங் எங்கு குண்டெறிந்தாரோ அதே இடத்தில் நாடாளுமன்ற வளாகத்தில் 2008 சுதந்திர தினத்தன்று பகத்சிங் சிலை நிறுவப்பட்டது.. பகத்சிங் தாயார் வித்யாவதி பஞ்சாபின் தாயார் என புகழப்பட்டார். அவர் மறைவின் போது அரசு மரியாதை செய்யப்பட்டது.

மாளிகை கட்டுபவர்கள் மண்குடிசையில் வாழும் நாடு- அழகான பொருட்களை செய்பவர் வாடும் நாடு. இதை மாற்றத்தான் போராடுகிறோம் என்றார் பகத்சிங். பயபக்தி நிறைந்த மக்கள் வாழும் நமது நாட்டில் மனிதாபிமானமில்லாமல் நாம் மற்றவரை நடத்துவது சரியா என கேள்வி எழுப்பியவர் பகத். தீண்டத்தகாதவர் என்பவர் நாட்டின் கட்டுமானமாக உழைத்தும் அடித்தட்டில் வாடுகிறார்கள். உறங்கும் புலிகளான அவர்கள் எழவேண்டும்

என்றார்.. மதம் தனிப்பட்ட விவகாரம். அரசியல் கலப்பது ஆபத்தானது என்றார். நாம் எவ்வளவு மகிழ்ச்சியுடனும் வாழ்ந்து கொண்டிருக்கலாம். கடமை அழைத்தால் அனைத்தையும் துறக்க சித்தமாக வேண்டும். தியாகம் என்பது அதுதான் என வரையறுத்தார். நாட்டில் இளைஞர்கள் யுவதிகளுக்கு காதல் இருக்க வேண்டும் என்றார். அடுத்த 15 ஆண்டுகளில் பிரிட்டிஷ்காரர்கள் நாட்டைவிட்டு ஓடுவர் என கருதினார். அவ்வாறே நடந்தது. ஆனால் அவரின் பிற கனவுகள் இன்றும் பெரும் போராட்டத் தேவைகளை சுமந்த வண்ணமே இருக்கின்றன.

Reference Materials:


1. The life and times of Bhagat Singh by Mahesh Sharama

2. Political Correspondence of Bhagat Singh

3. Articles of Mainstream Weekly 4.The History of Legend by Kama Maclean

பகத்சிங் வாசிப்பில்

சமன்லால் அவர்கள் தொகுத்த பகத்சிங் ரீடரை படித்த தருணத்தில் முகநூலில் சில செய்திகளை தந்துகொண்டிருந்தேன். அவற்றை திரட்டி தந்தால் பலனாக இருக்கும் என்ற எண்ணத்தில் இக்கட்டுரை தரப்படுகிறது.

பகத்சிங் தசரா குண்டு வழக்கில் தலைமறைவாக இருந்தார். லாலா பகட் சந்த் எனும் தனவந்தர் ஆதரவில் இப்ராகிம் எனும் தொழிலாளி குடிசையில் பகத்சிங் மறைந்திருந்தார். லாலா பகத்சிங்கிடம் தன் அன்பின் வெளிப்பாடாக வைரமோதிரம் ஒன்றை கொடுத்திருந்தார். இப்ராகிம் தன் மகள் சகீனாவிற்கு தன் ஏழ்மையின் காரணமாக திருமணம் முடிக்க இயலாத வறுமைச் சூழலை தெரிவித்த நிலையில் பகத்சிங் தன்னிடமிருந்த வைரமோதிரத்தை தன் தங்கை போன்ற சகீனா திருமண செலவிற்காக தந்துவிட்டார்.

இச்செய்தி பக் 24/675ல் சமன்லால் எடிட் செய்த புத்தகமான The Bhagat Singh Readerல் காணப்படுகிறது.

சைமன் கமிஷன் வந்த நேரத்தில் நவபாரத் சபா தீவிரமாக பணியாற்றியது. லாலாஜி கம்யூனலாக செயல்படுகிறார் என்ற எண்ணத்தில் பகத்சிங், சுக்தேவ், பகவதி சரண் வோரா ஆகியோர் லாலாஜியிடம் வாக்குவாதத்தில் ஈடுபட்டனர். லாலாஜி கோபமடைந்தார் angirily shutting the doors to Bhagat, sukhdev, Vora என சமன்லால் எழுதுகிறார். பின்னரும் லாலாஜி மீதான மரியாதை காரணமாக சைமன் எதிர்ப்பு ஆர்ப்பாட்டத்திற்கு தலைமைதாங்க இத்தோழர்கள் அவரை அழைத்தனர்.

சௌகத் உஸ்மானி தனது வாழ்க்கை குறிப்பில் மாஸ்கோவில் ஸ்டாலினை சந்தித்தபோது பகத்சிங்கை மாஸ்கோ அனுப்பச் சொன்னாராம். நேருவிற்கும் பகத்சிங்கை மாஸ்கோ அனுப்ப விருப்பம் இருந்ததாம். சந்திரசேகர் ஆசாத்திடம் மாஸ்கோவிற்கு செல்லும் செலவை தான் தருவதாகவும் சொன்னாராம். பகத்சிங் தந்தையின் சகோதரர் அஜித் சிங் பகத்சிங் அமெரிக்கா வரவேண்டும் என்றாராம். (பக் 25)

பகத்சிங் தன் தாத்தா அர்ஜுன் சிங்கிற்கு எழுதிய முதல் கடிதம் 22 ஜூலை 1918ல்தேதியிடப்பட்டதாகவுள்ளது. லாகூரிலிருந்து ஆறாவது படிக்கும்போது உருதுவில் எழுதப்பட்ட கடிதமிது. ஆங்கிலம், சமஸ்கிருத தேர்வில் வெற்றி கிட்டியுள்ளது. சமஸ்கிருதத்தில் 110/ 150 ம், ஆங்கிலத்தில் 68/ 150ம் பெற்றேன். நல்ல மதிப்பெண்தான் கவலை வேண்டாம். மற்ற தேர்வுகள் குறித்து இன்னும் தெரியவில்லை. நீங்கள் எப்போது வருகிறீர்கள்?. (50/675 பக்)

அடுத்த கடிதம் ஜூலை 27, 1919ல் பகத்சிங் எழுதியுள்ளார். அதில் தங்கள் உடல்நலத்திற்காக வேண்டிக்கொள்கிறேன். கணிதப்பாடத்தில் பலர் தேறவில்லை. எனவே மறு தேர்வாம். தாங்கள் எப்போது வருகிறீர்கள். நான் அரையாண்டுத் தேர்வில் அனைத்திலும் பாசாகிவிட்டேன். குல்தார் சிங்கிற்கு ஜூரமிருந்தது. இப்போது குணமாகிவிட்டது. கவலைவேண்டாம். அம்மாவிற்கு சாச்சாவிற்கும் நமஸ்தே தெரிவிக்கவும்.

அடுத்த கடிதம் நவம்பர் 14, 1921ல் எழுதப்பட்டுள்ளது. தங்கள் உடல்நலத்திற்கு கடவுளை பிரார்த்திக்கிறேன். ஏன் தங்களிடமிருந்து கடிதம் இல்லை. குல்பீர், குல்தார் எப்படியிருக்கிறார்கள். இந்த நாட்களில் ரயில்வே மக்கள் வேலைநிறுத்தம் செல்ல திட்டமிடுகிறார்கள். அடுத்தவாரம் இருக்கலாம் என நினைக்கிறேன். இதில் அவர் வேலைநிறுத்தம் பற்றி பேச ஆரம்பித்ததைக் காண்கிறோம். அப்போது அவருக்கு வயது 14.

அக்டோபர் 1921ல் லாகூரிலிருந்து ஹுகம் கெளர் அவர்களுக்கு எழுதிய கடிதம். பஞ்சாபி குர்முகியில் சின்னம்மாவிற்கு. அதில் அவர் அரசியல் தாகம், கூட்ட ஆர்வம் வெளிப்படுகிறது. கிராமத்திற்கு வரவேண்டும் என நினைத்தேன். வரமுடியவில்லை. சாச்சாஜி படம் தயாராகிவிட்டது. எடுத்துவரமுடியவில்லை. என்னை மன்னிக்கவும்.

அதே சின்னம்மாவிற்கு நவம்பர் 1921ல் எழுதுகிறார். குர்முகியில் அவருக்கு தேர்ச்சி இல்லாமல் ஏராள பிழைகளுடன் கடிதம் இருந்ததாக சமன்லால் தெரிவிக்கிறார். (பக் 52, 53, 54/ 675)

அஞ்சல் இலாகா அவருக்கு வந்த கடிதங்களை பிரித்துப்பார்த்து சோதனை செய்து அனுப்புகிறது என்ற சந்தேகம் எழுந்த நிலையில் பகத்சிங் முதலில் லாகூர் போஸ்ட்மாஸ்டருக்கும் பின்னர் பஞ்சாப் அரசாங்க செயலருக்கும் இது குறித்து விளக்கம் கேட்டு கடிதம் எழுதியுள்ளார். நவம்பர் 17, 1926ல் அவர் செயலருக்கு எழுதியுள்ளார். பொதுவாக தாத்தாவிலிருந்து அரசாங்க செயலர்வரை எழுதிய கடிதங்களில் obediently என்ற பொருள்தரும் வார்த்தையைத்தான் அவர் பயன்படுத்திவிட்டு கையொப்பம் இட்டுள்ளார்.

நவம்பர் 26 1926ல் எழுதிய செயலருக்கான கடிதத்திலும் அவர் I beg to draw your kind attention என்று ஆரம்பிப்பதையும் முடிக்கும்போது yours obediently என்ற மரியாதை சொற்களை பயன்படுத்துவதையும் காண்கிறோம்.

1927ல் அவர் கைதாகி 5 வாரங்கள் மே- ஜூனில் 1927 க்குப் பின்னர் விடுதலையாகிறார். தன் நண்பன் அமர் சந்திற்கு கடிதம் எழுதுகிறார். எழுதிய கடிதத்தில் படிப்பையும் புத்தகத்தையும் அவர் எப்படி நேசித்தார் என்பதைக் காண்கிறோம். கரம் சிங் என்கிற நண்பர் வெளிநாடு சென்று சட்டப்படிப்பில் ஈடுபடப்போவதை அக்கடிதத்தில் சொல்கிறார். வெளிநாடு படிக்க போகிறவர்களுக்கு வாழ்த்தை தெரிவித்து தன் விருப்பம் பற்றி இவ்வாறு சொல்கிறார்- my desire to go abroad to pursue studies proved to be very ruinous..anyway I wish the people all the best என்கிறார். அமெரிக்காவில் நல்ல புத்தகங்கள் கிடைக்கும்- அனுப்புமாறு அமர்சந்தை வேண்டுகிறார். சான்பிரான்சிஸ்கோவில் தனது தந்தையின் சகோதரர் அஜித் சிங்ஜி இருந்தால் அவரைப்பற்றி அறிந்தால் தெரிவிக்கவும். அவர் உயிருடன் இருக்கிறார் என்ற நம்பிக்கை உறுதிபடும் என்கிற அடிமன வேதனையை வெளிப்படுத்துகிறார். எனக்கு தொடர்ந்து ஏராள பிரச்னைகள். ரூ 60000த்தில் தான் bail ல் வரவிட்டனர். நிபந்தனைகள் இருக்கின்றன. கடவுள் சித்தம் எதுவோ. தேவையில்லாமல் எங்களை வதைக்கிறார்கள். சகோதரா study with all your heart and soul. வேறென்ன எழுதுவது. சந்தேக நிழலில் நான் குறிவைக்கப்பட்டுள்ளேன். எனது கடிதங்கள் சோதனை செய்யப்படுகின்றன. ஏன் என் மீது இவ்வளவு சந்தேகம்.எதுவாயினும் உண்மை ஒருநாள் நிலைக்கும் (பக் 62/63)

பகத்சிங் காதல் குறித்த உரையாடல் ஒன்றை சுகதேவ் குற்றச்சாட்டிற்கு விளக்கம் தரும் வகையில் மேற்கொண்டார்.

ஹிந்துஸ்தான் சோசலிஸ்ட் ரிபப்ளிகன் அசோசியேஷன் கூடி ஏப்ரல் 8 1929ல் டெல்லி மத்திய சட்டமன்றத்தில் குண்டுவீசுவதற்கு இரு தோழர்கள் என முடிவெடுத்தது. பகத்சிங் தன்னை அனுப்பவேண்டுகிறார். அது ஏற்கப்படவில்லை. சுகதேவ் அக்கூட்டத்தில் பங்கேற்கவில்லை. முடிவையறிந்ததும் பகத்சிங் பெண் மீதான மோகம் ஒன்றால் தப்பிக்க நினைத்ததாக சுகதேவ் குற்றம் சாட்டினார்- escapism due to his fascination for a certain women என்பது சுகதேவ் மனதிலிருந்து வந்தவை. இந்த சுடும் சொற்கள் பகத்சிங்கை காயப்படுத்தின. மீண்டும் கூட்டத்தைக் கூட்டி பகத்சிங்கும் பதுகேஸ்வர் தத்தும் குண்டெறிய செல்வது என்கிற முடிவை எட்டுகின்றனர்.

தனது நெருங்கிய நண்பன் சுகதேவிற்கு ஏப்ரல் 5, 1929ல் பகத்சிங் கடிதம் எழுதுகிறார். அது காதல் வயப்படுதல் குறித்த நல்லதோர் உரையாடலாகவும் அமைந்தது. புரட்சியாளர்கள் காதல் வயப்படுவதில் தவறேதுமில்லை. உயர் இலட்சியத்திற்காக எதையும் இழக்கவும் தயாரான மனநிலைக்கு செல்லவேண்டும் எனவும் அக்கடிதம்

பேசுகிறது. இக்கடிதத்தை சிவ் வர்மா நேரிடையாக சுகதேவிடம் சேர்ப்பித்தார். அக்கடிதத்தில் பகத்சிங்..

அன்பான சகோதரா

இக்கடிதம் கிடைக்கும் நேரம் நான் தொலைதூரம் சென்றிருப்பேன். எனது இறுதி பயணத்திற்கு தயாரான இந்நாட்களில் நான் மிக மகிழ்வுடன் இருக்கிறேன் என நம்பு. எனது வாழ்வின் சந்தோஷங்களில் இனிய நினைவுகளில் ஒரு விஷயம் என்னை உறுத்துகிறது. எனது சொந்த சகோதரன் என்னை தவறாக புரிந்துகொண்டு எனது பலவீனம் என பெரும் குற்றச்சாட்டை வைத்ததுதான்.

உனது சந்தேகம் ஆதாரமற்றது. தவறான புரிதல். நான் கொஞ்சம் வாயாடி- எல்லாவற்றையும் சொல்லிவிடுபவன்- சகஜஜீவி. அது என் பலவீனமாக புரிந்துகொள்ளப்பட்டுள்ளது. நான் பலவீனமானவன் இல்லை. நம் எவரையும்விட பலவீனமானவனும் இல்லை.

எனது அருமை சகோதரா, உனது சந்தேகத்தைப்போக்கி தெளிந்த மனதுடன் விடைபெறுகிறேன். இதற்காக உனக்கு நன்றியுடையவனாக இருப்பேன். நீ கவனமாக இரு. அவசரப்படாதே. கவனமாக சிந்தி. அமைதியாக அதேநேரத்தில் ‘சீரியசாக’ காரியத்தை நீ செய்யவேண்டும். சந்தர்ப்பத்தை கட்டாயப்படுத்தாதே. மக்களுக்கான உன் கடமையை ஜாக்கிரதை உணர்வுடன் எடுத்துச் செல்.....

சரி நமது விவாதம் தொடர்பாக என் தரப்பை சொல்கிறேன். வாழ்வின் அனைத்து வண்ணங்களிலும் எனக்கு நாட்டமுண்டு. ஆனால் பொருத்தமான தருணத்தில் எதையும் விட்டுவிட என்னால் முடியும். அதுதானே தியாகம் என்பது. அது நமது பாதையை தடுக்காது. அதற்கான சாட்சியம் உனக்கு விரைவில் கிடைக்கும். ஒருவரைபற்றிப் பேசும்போது காதல் அவருக்கு உதவியதா எனப் பார்க்கவேண்டும். ஆமாம். மாஜினிக்கு அது உதவவே செய்தது...... love என்பது ஒருவகை emotion. அது மிருகத்தன உணர்வல்ல.

உண்மையான காதல் ஒருவரை உயர்த்தும். சினிமாவில் காட்டப்படுவதுபோல் மிருகத்தனத்திற்கு பலியாகும் பெண்கள் போல் இந்தப் பெண்களை பைத்தியம் என நாம் கருதக்கூடாது. உண்மையான காதலை எவரும் உருவாக்கிவிடமுடியாது. அது சுரக்கும். ஆண் பெண் காதல்வயப்பட்டு உணர்வுகளுக்கு மேல் உயர்ந்து நிற்கமுடியும். கட்டுப்பாட்டுடன் தூய்மையாக இருக்கமுடியும். மனசாட்சியின்படி நாம்

நடக்கும்போது அன்பு, வெறுப்பு போன்ற மனித உணர்வுகளை கட்டுக்குள் வைத்து வெல்லமுடியும்.

நான் ஒருவர் மற்றவர்மீது காதல் வயப்படுவதை விமர்சித்துள்ளேன். ஒருவரிடம் மட்டுமே அடங்கிவிடாது மானுடத்தின் மீதான பரந்த அணைப்பைக்கொண்ட காதல் அவசியமானது. நான் என் தரப்பை தெளிவுபடுத்திவிட்டேன். ஆர்யசமாஜிகள் பேசும் pure morality வேண்டாம்.

நாம் நமது பலவீனங்களை புரட்சிகரமாக உரக்கப்பேசி மறைத்துவிடலாம். ஆனால் உண்மையான வாழ்க்கை நடுக்கம் தருவது. தீவிர இலட்சியவாதம் எனும் பலவீனத்திலிருந்து வெளியே வா சகோதரா.. இப்படி பலவீனங்களுக்கு இரையாகும் என் போன்றோரிடத்தில் கோபமடையாதே- கடுஞ்சொல் வீசாதே. அவர்கள் உனது இரக்கத்திற்குரியவர்கள். கருணை காட்டு. அதுதான் அவர்களுக்கு தேவைப்படுகிறது. ஆனால் அது போன்ற ஒன்றிற்கு இரையாகாமல் உன்னால் இவற்றை புரிந்துகொள்ளமுடியாது.

ஏன் இதெல்லாம் எழுதுகிறேன். எனது மனதை திறந்து காட்ட விரும்பினேன். என் மனப்பாரத்தை இறக்கிவைத்துவிட்டேன்.. உனது வாழ்வின் வெற்றிக்கும் மகிழ்ச்சிக்கும் எனது வாழ்த்துகள்

உனது பகத்சிங் (பக் 68)

சுகதேவ் சிறை வதையிலிருந்து விடுபட தற்கொலை வழி என்ற மன உணர்வில் இருந்தபோது அது மிகத் தவறான பாதை என்பதை எடுத்துரைத்து அருமையான உரையாடல் ஒன்றை அவருடன் பகத்சிங் தன் கடிதம் வாயிலாக நடத்தினார். இக்கடிதம் செப்டம்பர் 1930 ல் எழுதப்பட்டதாக நமக்கு தெரியவருகிறது. அதில் மார்க்ஸ் பற்றியும் சில வரிகள் இடம் பெற்றுள்ளன. அவ்வரிகள் மட்டும் இங்கே...

we are just product of the need of the hour எனச் சொல்லி மார்க்சை குறிப்பிட்டு பகத்சிங் எழுதுகிறார். கம்யூனிசத்தின் தந்தை எனப்படும் மார்க்ஸ் அந்த சிந்தனையின் மூல முதல்வர் அல்லர். அய்ரோப்பாவின் தொழிற்புரட்சி சில சிந்தனை மாற்றத்தை உருவாக்கியது. புதிய சிந்தனைகள் உருவாயின. மார்க்ஸ் அப்படியான சிந்தனையாளர்களில் ஒருவர். Marx undoubtedly proved to be essentially helpful to some extent in moveing the wheel of time in a particular direction.

நானும் நீயும் இந்தியாவில் சோசலிச கருத்துக்களை உருவாக்கியவர்கள் இல்லை. சூழ்நிலை அந்த தாக்கத்தை நம்மீது தந்தன. சந்தேகமில்லாமல் நாம் அச்சிந்தனையை

பரப்ப சிறு அளவில் செயல்பட்டிருக்கிறோம். எதிரான சூழலிலிருந்து தப்பிக்க தற்கொலை வழியாகாது. பகுனின் அப்படி நினைத்திருந்தால்..இன்னும் ருஷ்யா சிறைக்கூடத்தில் வாடும் பல புரட்சிக்காரார்கள் அப்படி நினைத்திருந்தால்.. என்று அவர் எழுதி சுகதேவிற்கு நம்பிக்கை தந்ததைக் காண்கிறோம். (பக் 123)

தனது தோழன் ஜெய்தேவ் குப்தாவிற்கு சிறையில் தங்கள் தேவைகளுக்காக வேண்டிய பொருட்கள் பற்றி பகத்சிங் சில கடிதங்கள் எழுதியுள்ளார். இந்தக் கடிதங்கள் பிப்ரவரி 24, 1930 - ஜூலை 24, 1930க்கு இடைப்பட்ட நாட்களில் எழுதப்பட்டவை. தேவைகளில் பல தன்னுடன் குண்டுவீசிய தோழன் பி கே தத் பொருட்டு எழுதப்பட்டுள்ளன. நகைச்சுவையும் வாழ்வின் வண்ணங்களையும் அனுபவிக்க விரும்புவனவாக அவை இருக்கின்றன.

இக்கடிதங்கள் லாகூர் மத்திய சிறையிலிருந்து எழுதப்பட்டுள்ளன. ஜெய் தியோ பிரசாத் குப்தாவின் முகவரியாக மாநில காங்கிரஸ் கமிட்டி அலுவலகம் என்பது போடப்பட்டுள்ளது. பகத்சிங் தான் எழுதும் கடிதங்களை காங்கிரஸ் அலுவலக முகவரிக்கே எழுதி சம்பந்தப்பட்டவர்கள் பெற்றுக்கொள்ளச் செய்திருப்பதாக தெரிகிறது. சில கடிதம் அவரின் தந்தையார் முகவரிக்கும் அனுப்பப்பட்டுள்ளன.

முதல் கடிதத்தில் தத்தாவிற்கு சிகரெட் இல்லாமல் அவதிப்படுவதை சுட்டிக்காட்டுகிறார் பகத்சிங். தேவைகளாக Craven Cigarettes , A Tin of Ghee, Oranges, Rasagullas என்கிற தேவைப்பட்டியல் தரப்பட்டுள்ளது. முடிக்கும்போது Thanking You in advance yours Sincerely என்பதை பயன்படுத்தியுள்ளார். அதிகாரிகளுக்கும், பெரியவர்களுக்கும் எழுதும்போது yours obediently என்பதையும் ஒருமுறை தந்தையின் செயலை ஏற்கமுடியாமல், அவருக்காக போட்ட பெட்டிஷனை நிராகரித்து எழுதியபோது yours என்று நிறுத்துவதையும் பார்க்கிறோம். (பக் 136/675)

அடுத்த கடிதம் மே 26, 1930ல் ஜெய்தேவிற்கு எழுதப்பட்டுள்ளது. அதில் அவருடன் பேட்டிக்கான அனுமதி மறுக்கப்படுவதற்கு வருத்தத்தைச் சொல்லி தங்கள் தேவைகளை எழுதுகிறார் பகத்சிங்.

One Fleet Shoe No. 9-10 , some recent Interesting Novels என்று கேட்டுவிட்டு மறக்காமல் நண்பர்களை விசாரித்ததாக சொல்லவும் என எழுதியிருப்பதைப் பார்க்கிறோம்.

ஜூன் 30 அன்று எழுதப்பட்ட கடிதத்தில் Victory Fleets, white polish bottle அனுப்பியமைக்கு நன்றி தெரிவிக்கிறார். தன் தேவைகளை பட்டியலிட்டு எழுதுகிறார். தத்திற்கு fleet shoes size 7 வேண்டும். அளவு சரியில்லையெனில்

திருப்பித் தரப்படும் என்பதை கடைக்காரனிடம் சொல்லி வை. முன்னரே தத்திற்கும் சேர்த்து கேட்டிருப்பேன். ஆனால் அப்போது தத் mood பாதிக்கப்பட்டிருந்தது. நான் மட்டும் ஷூ அணிவதில் சங்கடமாக இருக்கிறது. அடுத்த முறை பார்க்கவருபவர்களிடம் கொடுத்து அனுப்பலாம். தத்திற்கு white shirt , chest 34- Shakesperean Collar - half sleeves தேவை.

என்னடா இவர்கள்- சிறையிலும் போய் வசதிகளை- expensive mode of living- இந்த நண்பர்கள் குறைத்துக்கொள்ளாமல் இருக்கிறார்களே என நினைக்காதே. அவை அவசியமாக இருக்கின்றன.

பின்னர் தனது தந்தையார் பற்றி விசாரிக்கிறார். லூதியானா போய் திரும்பிவிட்டாரா? அவர் என்னை இருமுறை பார்க்க வரமுடியும். அவர் தனியாக வரவேண்டாம். என் காலமும் அவர் காலமும் முடியப்போகிறது. குல்பீர் மற்றும் சகோதரிகளை நாளை வரச்சொல். எனக்கு பெர்சியன் கற்பதற்கும் உருது மொழியாக்கங்களுக்கும் வேண்டியதை அனுப்பு. இந்த கடிதத்தில் yours என்பது மட்டுமே போடப்பட்டுள்ளது.

ஜூலை 24, 1930 கடிதத்தில் துவாரகாதாஸ் நூலகத்திலிருந்து எனது பெயரில் கீழ்கண்ட புத்தகங்களை பெற்று அனுப்பு.

Militarism by Karl Liebknecht , Why Men Fight by Russel, Soviets at Work, Collapse of Second International, Left Wing Communism, Mutual Aid by prince Kropotkin, Fields Factories and Workshops, Civil War in France by Marx, Land Revoultion in Russia, Spy by Upton Sinclair.

தவிர பஞ்சாப் பொது நூலகத்திலிருக்கும் Historical materialism by Bukharin. நூலகரிடம் விசாரி- பார்ஸ்டல் சிறைக்கு புத்தகங்கள் அனுப்பப்பட்டிருக்கிறதா- புத்தக பஞ்சம் இருக்கிறது. சுகதேவ் சகோதரர் மூலம் சில புத்தகங்கள் வந்துள்ளன. அவை பற்றி தெரியவில்லை. லால பிரோஸ் சந்திடம் சொல்லி அச்சிறை தோழர்களுக்கு தேவைப்படும் புத்தகங்களை அனுப்பச்சொல். நான் ஞாயிறு அங்கு செல்வதற்குள் புத்தகங்கள் வந்தால் நல்லது. அதே போல் டாக்டர் ஆலம் எழுதிய peasants in Prosperity and Debt போன்ற 2 அல்லது 3 புத்தகங்களை அனுப்பு. தொந்திரவு செய்கிறேன். மன்னித்துக்கொள். இனி தொந்திரவு செய்யமாட்டேன்.

தத்தா சகோதரி வந்தால் என்னை பார்க்காமல் செல்லமாட்டாள். நண்பர்களிடம் சொல்லு. இங்கு with regards என பகத்சிங் முடிக்கிறார்.

அவரின் 22-23 வயதில் வாசிக்க கேட்ட புத்தகங்கள் மலைக்க வைக்கிறது. மார்க்ஸ், லெனின் மட்டுமல்லாது அனார்க்கிஸ்ட்களான குரோபோட்கின், பகுனின் புத்தகங்களையும் பகத்சிங் தேடித்தேடி படித்துள்ளதும் அனார்க்கிசத்தில் ஈர்ப்புடன் இருந்ததையும் காணமுடிகிறது.

நீதிமன்றத்தில் பகத்சிங் சொன்னதாக நமக்கு தரப்படும் வரிகளில் ஒன்று We hold human life sacred beyond words, and would sooner lay our lives in the service of humanity than injure anyone else. மனித வாழ்க்கை புனிதமானது- மானுட சேவைக்காக எவரையும் காயப்படுத்தாமல் எங்கள் உயிரை இழப்போம் என்பது இதன் பொருள். அவர்கள் தங்கள் உயிர் பறிக்கப்பட்டது குறித்து அஞ்சவில்லை என்பதை நாம் அறிவோம். அவர்கள் பெரும் புரட்சியாளர்களாக கொண்டாடப்படுவதையும் பார்க்கிறோம்.

ஆனால்... இங்கு அவர்கள் இந்திய Vs பிரிட்டிஷ் உயிர் அல்லது தேசபக்த உயிர் Vs கொடும் ஆட்சியாளர் உயிர் எனப் பிரித்து பேசவில்லை. ஒட்டுமொத்தமாக human life sacred என்றுதான் சொன்னதைப்பார்க்கிறோம். பின்னர் ஏன் அவர்கள் சாண்டர்ஸ் உயிரை மாய்த்து அந்த வழக்கில் தாங்களும் தங்கள் உயிரை பறிக்க அனுமதித்தனர் என்பது விவாதிக்கப்படவேண்டிய கேள்வி.

மத்திய சட்டமன்றத்தில் Public saftey bill - Trade Disputes Bill வந்தநேரம் பகத்சிங்கும் தத்தும் எறிந்த குண்டுகள் உயிரை மாய்க்கும் சக்தியற்றவை எனவும் அறிகிறோம்- harmless bombs that create noise but do no damage to human lives. அங்கு உயிர் பலியல்ல நோக்கம் என அவர்கள் புரியவைத்தனர். இதற்கு முன்பு நடந்த சாண்டர்ஸ் கொலை குறித்த விஷயத்தில் human life sacred என்கிற புரிதலில் பகத்சிங் தோழர்கள் தவறியது விவாதத்திற்குரிய கேள்வியாக எனக்குத் தோன்றுகிறது. அந்தப் புரிதல் அப்போது அவர்களிடம் உருவாகவில்லையா என்பதை கூர்ந்து நோக்கவேண்டியதாகவுள்ளது. அந்தக்கொலைக்கு பின்னர் ஏற்பட்டு திடமாகிப்போன புரிதலா என்பதையும் பார்க்கவேண்டியுள்ளது. அவர் அப்போது 22 வயது இளைஞர் என்பதையும் சேர்த்தே பார்க்கவும் வேண்டியுள்ளது.

எனது 22 வயதில் எவ்வளவு பொறுப்புடன் செயலும் சிந்தனையும் இருந்தன என்பதைப் ஒப்பிட்டால் எனக்கும் 50 ஆண்டுகளுக்கு முன்னரே பிறந்த அந்த இளைஞனின் maturity பிரமிக்கவும் வைக்கிறது. ஆனால் மனித உயிர் புனிதமானது என்று தெளிந்த பாதை முக்கியமானதாகப்படுகிறது. இந்த தெளிவை தன் சொந்த அனுபவத்தில் அவர் 23 வயதுக்குள் அடைந்தார் என்பதில் தான் பகத்சிங் சிறப்பு இருப்பதாக எனக்குத் தோன்றுகிறது.

ஏப்ரல் 8 1929 அன்று Trade Disputes Bill as amended by the Select Committee விவாதங்களுக்குப் பின்னர் வாக்கெடுப்பிற்கு சென்றது. அரசின் இந்த பில்லிற்கு ஆதரவாக 56 வாக்குகளும் எதிராக 38 வாக்குகளும் விழுந்தன. எதிர்த்து வாக்களித்தவர்களில் மோதிலால் நேரு, திவான் சமன்லால், எம் எஸ் ஆனே, எஸ் சீனிவாச அய்யங்கார், ரங்கசாமி அய்யங்கார், ரபி அகமது கித்வாய், என் சி கேல்கர், மதன் மோகன் மாளவியா, டாக்டர் மூஞ்சே, ரங்கா அய்யர், சர்தார் கர்த்தார் சிங், பி பி நாயுடு போன்றவர்கள் இருந்தனர்.

ஆதரித்து வாக்களித்தவர்களாக எம் கே ஆச்சார்யா, முகமது நவாஸ் கான், ராவ்பகதூர் எம் சி ராஜா, புபேந்திரநாத் மித்ரா போன்ற பெயர்கள் பல ஆங்கிலேயர்களின் பெயருடன் வருகின்றன. எம் சி ராஜா அரசிற்கு ஆதரவாக இந்த பில்லில் நிலையெடுத்து நின்றதை வாக்கெடுப்பு பதிவில் காண்கிறோம்.

அவையில் பிரசிடெண்ட் I propose to give my ruling என்ற போது பார்வையாளர் வரிசையிலிருந்து official members benches மீது இரு குண்டுகள் வீசப்பட்டது. அவை ஒத்திவைக்கப்படுகிறது.

அடுத்து நமக்கு அசெம்பிளி விவாதம் பற்றிய குறிப்புகள் ஏப்ரல் 11, 1929 வியாழக்கிழமைக்கானது கிடைக்கிறது. அவையின் பிரசிடெண்ட் எவருக்கும் காயம் பெரிதாக இல்லை என்பதால் அக்குண்டுவீச்சு என்பது குறைவான கண்டனத்திற்குரிய ஒன்றல்ல என்று சொல்லி motion ஒன்றை முன்மொழிந்தார். அதில் The House Condemns unreservedly this outrage and assures the authorities of its full support in such reasonable steps as may be necessary to prevent a recurrence of such crimes"

The Motion was adopted unanimously என்ற இந்த அவைக்குறிப்பை நாம் பார்க்கிறோம். முன்னர் சட்ட மசோதாவை எதிர்த்து வாக்களித்தவர்களும் இப்போது எதிராக நிற்கமுடியாமல் போனதையும் அறிகிறோம்.

ஏப்ரல் 12 1929 அன்று வைஸ்ராய் இர்வின் அவர்கள் அசெம்பிளியில் உரையாற்றினார். எல்லோர் கண் எதிரிலும் நடந்த ஒரு விஷயம் குறித்து அதிகம் பேசத்தேவையில்லை என்று அவர் ஆரம்பித்தாலும் வன்முறை தீர்வாகாது என்பதை அவர்தம் உரையில் தெளிவுபடுத்தினார்.

பகத்சிங்கும் தன் மீது படிந்த terrorist என்ற முத்திரையை அகற்ற பிப்ரவரி 2, 1931ல் அவர் எழுதிய Letter to young Political Workersல் முயற்சித்ததைக் காண்கிறோம். அதில் நான் புரட்சிக்காரனே தவிர பயங்கரவாதியல்ல என்கிறார். அதுபோல் குண்டுவீசுவது

போன்றவை is not only useless but sometimes harmful என வந்தடைவதைப் பார்க்கிறோம். இந்த அனுபவத்தை சரியாக அனைவரும் உள்வாங்கிக்கொள்வது அவசியம் எனப்படுகிறது.

நேரு நேதாஜி பற்றி பகத்சிங் தனது அபிப்பிராயத்தை எழுதியுள்ளதையும் காண்கிறோம்.

பஞ்சாபி மொழியில் ஜூலை 1928ல் Kirti பத்திரிகையில் New Leaders and their Different Ideas என பகத்சிங் எழுதிய கட்டுரையில் அவரது கருத்துக்கள் கிடைக்கின்றன. 1928களில் செல்வாக்குடன் காங்கிரஸ் பழைய தலைவர்களை விஞ்சி வெளித்தெரியத் துவங்கிய இரு முக்கிய தலைவர்களை பஞ்சாப் இளைஞர்களுக்கு சரியாக அறிமுகப்படுத்தவேண்டிய பொறுப்பை பகத்சிங் எடுத்துக்கொண்டிருப்பதை இக்கட்டுரையில் காணமுடியும்.

இந்தியாவில் புதிய தலைவர்கள் புதிய சிந்தனைகளுடன் வந்துள்ளார்கள். தேசபக்தர்கள் கண்களில் நன்றாகவே அவர்கள் தெரியத்துவங்கியுள்ளனர். வங்கத்தின் மரியாதைக்குரிய சுபாஷ் சந்திர போஸ் மற்றும் மரியாதைக்குரிய பண்டிட் ஜவஹர்லால் நேரு ஆகிய இருவரும் இவ்வாறு முன்வந்துள்ள தலைவர்கள். இவர்கள் இருவரும்தான் இளைஞர் இயக்கங்களுடன் நிற்கிறார்கள். ஹிந்துஸ்தான் விடுதலை என்பதற்காக நிற்கிறார்கள். விவரம் அறிந்த புத்தி தெளிந்த உண்மையான தேசபக்தர்களாக இருவரும் காட்சியளிக்கின்றனர். அவர்களின் சிந்தனையில் வேறுபாடுகள் இல்லாமல் இல்லை. ஒருவர் பாரத் எனும் பழமை வாய்ந்த கலாச்சாரத்தின் அவசியம் பற்றி பேசுபவர். மற்றொருவர் மேற்கின் மாணவர். ஒருவர் அமைதியான குரலில் பேசிவரும் கனவான். மற்றவர் புரட்சிகரமாக பேசிவருபவர்.

இவர்களுடன் சாது வாஸ்வனி என்பாரும் அதிக அறிமுகமில்லாதவர் என்றாலும் பாரத் யுவ சங்கம் மூலம் ஏராள இளைஞர்களை ஈர்த்து வருகிறார். அவர் ஆர்ய சமாஜிகள் போல வேதத்திற்கு திரும்புக என்கிறார். இளம் கூட்டம் அவருடன் செல்கிறது. வாஸ்வனியும் பேசுகிறார்- நமது இளைஞர்கள் மாஜினி, வால்டேர் இலட்சியங்கள் நோக்கி செல்கிறார்கள். டால்ஸ்டாய், லெனின் என தெரிந்துகொள்கிறார்கள். இங்கே நம்மிடையே பழம்பெரு ரிஷிகளிடம் உயர் இலட்சியங்கள் குடிகொண்டிருந்தன. அவைகளை கற்கவேண்டும் என்கிறார்.. நமக்கு சக்தி தேவை என கவித்துவமாக அவர் பேசிவருகிறார். பாரதமாதாவின் விடுதலை எவரும் தள்ளிப்போடமுடியாதென்கிறார். அந்த ரிஷிகளின் கரம்பற்றி ஹிந்துஸ்தான் எனும் புனிதம் எழட்டும் என்கிறார். தாய்நாடு என தொடர்ந்து பேசிவருகிறார். ஆனால் அதே நேரத்தில் இந்தியா போல்ஷ்விக் எனும்

வர்க்கப்போராட்ட திசையில் சென்றுவிடக்கூடதென்றும் சொல்கிறார். இவையெல்லாம் இளைஞர்களிடம் செல்வாக்கை செலுத்துகின்றன.

சரி இனி சுபாஷிடம் வரலாம். அவரை புரட்சியாளராக பிரிட்டிஷ் பார்ப்பதால்தான் அவரை தனிமை சிறையில் அடைத்தது.. அவர் முழுவிடுதலை என பேசுபவர். நேரு மோதிலால் அவர்களின் மகன். பாரிஸ்டர். படித்தவர். ருஷ்யா சென்று வந்தவர். அவரும் சுபாஷ் போல தீவிர குழுவாளர். முழுவிடுதலை தீர்மானத்தை சென்னை கூட்டத்தில் நிறைவேற்றியவர்.

பம்பாய் கூட்டம் ஒன்றில் நேரு தலைமையில் சுபாஷ் உரையாற்றினார். அவர் emotional Bengali. நாட்டின் ஆன்மீகத்தன்மையை சொன்னார். வேதத்திற்கு திரும்புவது பற்றியும் பேசினார். புனாவில் பேசும்போது தேசியம் பிற்போக்கானது என சில சர்வதேசியவாதிகள் பேசுவது தவறென்றார். இந்துஸ்தானி தேசியம் என்பது வேறுவகையானதென்றார். அது குறுகிய மனம் கொண்டதல்ல. அதன் அடிப்படை சத்யம் சிவம் சுந்தரம் என்றார். இப்படி சுபாஷ் பேசுவது 'எமோஷனல் ரொமாண்டிசம்'. அவரைப் பொறுத்தவரை குடியரசு ஜனநாயகம் என்பதெல்லாம் இந்துஸ்தானின் பழைய கருத்தாங்கங்களாம்.. கம்யூனிசம் கூட இந்துஸ்தானுக்கு புதியதில்லையாம்.

நேரு முற்றிலும் மாறாக பதிலை தந்தார். எனது நாட்டிற்கான தனிச்சிறப்பு ஏதுமில்லை. சுபாஷ் பாபுவிற்கு அதில் நம்பிக்கை இருக்கிறதென்றார். என்னைப்பொறுத்தவரை அது வேதமானாலும் குரான் ஆனாலும் பொருந்தாதவை இருந்தால் அவற்றை விட்டுவிடவேண்டும் என்றார் நேரு.

ஒருவர் நமது மரபு சிறந்தது என்றார். மற்றவர் அதை எதிர்த்து கலகம் என்றார். ஒருவர் எமோஷனல் ஆக உரையாற்றுகிறார். நேரு புரட்சிகரமாக கலகம் பற்றி பேசுகிறார். நேரு மேலும் தெளிவு படுத்தினார். பல நூற்றாண்டு பெருமை எனப்பேசி அதை நோக்கி போகமுடியாது. அப்படியெனில் உலக கற்பனை வளமற்று தேங்கிப்போகும். அதனால்தான் அவருக்கு புரட்சிகர சிந்தனை தேவைப்படுகிறது போலும்.

இருவரும் முழுவிடுதலை என்றே சொல்கின்றனர். ஒருவர் கிழக்கு எனப்பேசி சொல்கிறார். நேரு நமக்கான விதிகள் சிஸ்டம் உருவாக்குவோம் என்கிறார். . சுபாஷ் தொழிலாளர் முன்னேற்றம் பற்றி நினைக்கிறார். பண்டிட்ஜி புரட்சிகர மாறுதலுடன் புதிய சிஸ்டம் என்கிறார். சுபாஷ் சென்சிட்டிவ். அவர் இதயத்துடன் நிற்கிறார். ஆனால் நேரு இதயத்துடன் தலையை இணைக்கிறார். சோசலிசம் சார்ந்த மக்கள் விடுதலை என்கிறார். இந்துஸ்தானுக்கு உதவத்தகுந்த அளவில் உலக அரசியலை சுபாஷ் பேசினால், நேரு எந்த

குறுகிய தேசியம் என அடைப்பட்டுக்கொள்ளாமல் உலகம் சுற்றி அறியக்கூடியவராக இருக்கிறார்.

எப்பக்கம் செல்வது? பஞ்சாப் பத்திரிகை ஒன்று சுபாஷை வாழ்த்தி, நேரு போன்ற புரட்சி பேசுபவர்கள் சுவரில் முட்டி சாவார்கள் எனச் சொல்கிறது. பஞ்சாபியர்கள் எமோஷனலாக இருப்பவர்கள் என்பதை நாம் அறிவோம். சுபாஷ் தருவதில் இதயத்திற்கான உணவு கிடைக்கலாம். ஆனால் mental stimulus கிடைக்கவில்லை. நேருவிடம் இதயமும் மூளைத்தூண்டலும் ஒருங்கே கிடைக்கிறது. அதற்காக நேருவை கண்மூடிக்கொண்டு பின்பற்ற வேண்டிய அவசியமில்லை. பஞ்சாபிய இளைஞர்கள் அவரின் புரட்சிகர சிந்தனைகளை உள்வாங்கிக்கொள்ள வேண்டும். இந்துஸ்தானுக்கு தேவையான புரட்சிகர சிந்தனைகள் அவை. சரியாக உள்வாங்கிக்கொண்டு சில நேரங்களில் ஏமாற்றங்கள் அவநம்பிக்கை வந்தாலும் சமாளித்து அவைகளை களைந்து உலகை இளைஞர்கள் சந்திக்கவேண்டும். அப்படிப்பட்டவர்களால்தான் புரட்சி வெற்றிபெறும்.

லாலாஜியும் இளைஞர்களும் என்கிற கட்டுரை ஒன்றையும் பகத்சிங் எழுதியுள்ளார். 1928ல் பஞ்சாபியில் எழுதப்பட்ட கட்டுரை. அது லாலாஜி மீதான மதிப்பீடாகவும் விமர்சனமாகவும் இருக்கிறது.

லாலாஜி ஆரம்பத்திலிருந்தே சில காரணங்களால் இளைஞர் இயக்கங்களுக்கு எதிராகவே இருக்கிறார்.. லாலாஜி இத்தாலியின் மாஜினியால் கவரப்பட்டவர். மாஜினியோ இளைஞர்களை முழுமையாக விடுதலைப்போருக்கு தயாரித்தவர். எப்படி இந்த வேறுபாடு. 1907-08க்கே போகவேண்டாம். இப்போது பார்த்தாலே போதும். கடந்த கவுன்சில் தேர்தலில் லாலாஜி காங்கிரசை கைவிட்டார். சில இளைஞர்கள் இதை ஆட்சேபித்தனர். ஆனால் இதற்கு பதில் அளித்த லாலாஜியோ இந்த இளைஞர்கள் ஆபத்தானவர்கள்- புரட்சிக்கு ஆதரவாளர்கள்- அதற்கு லெனின் போல் தலைமை வேண்டும் என நினைப்பவர்கள் என விமர்சித்தார். என்னால் லெனின் போல் ஆகமுடியாதப்பா- இந்த இளைஞர்களுக்கு ரூ 50க்கு வேலை கிடைத்தால் போய்விடுவார்கள் எனவும் அவர் தனது உரையில் பேசினார்.

லெனின் இப்படிப்பட்ட பணத்திற்கு போகும் இளைஞர்களையா வைத்திருந்தார்? லாலாஜி என்ன செய்துள்ளார்- ஒரு பக்கம் அரசாங்கம் இந்த இளைஞர்கள் மீது நடவடிக்கை எடுக்க உதவியுள்ளார். மறுபக்கம் பொதுவெளியில் குறைவான மதிப்பீட்டை தந்துள்ளார்.

பிற மனிதரின் செயல் சிந்தனைகளைப் பற்றி நல்ல உணர்வுடன் ஒருவர் விமர்சனம் செய்யலாம். ஆனால் திசைதிருப்பி ஒருவருக்கு கெடுதல் செய்யும் நோக்கத்துடன்

செய்யக்கூடாது. அது லாலாஜியானாலும் வேறு இளைஞனானாலும் பொருந்தும். லாலாஜி தான் எழுதிய கட்டுரையில் மண்டைச் சூடு நிறைந்த இந்த இளைஞர்களிடம் ஜாக்கிரதையாக மக்கள் இருக்கவேண்டும் என எழுதியுள்ளார். அவர்கள் புரட்சி எனப் பேசி சொத்துக்களுக்கு ஆபத்தை பொதுவெளியில் முன்வைக்கிறார்கள். அவர்கள் கம்யூனிச சிந்தனைகளை பிரச்சாரம் செய்வதால் தேசிய இயக்கத்திற்கு குந்தகம் செய்கிறார்கள். இதன் மூலம் வர்க்கப்போர்தான் மிஞ்சும். இவையெல்லாம் சில அந்நிய சக்திகளின் தூண்டுதல் எனவும் லாலாஜி எழுதுகிறார்.

இந்த சக்திகள் தேசிய இயக்கத்தில் பிளவை உருவாக்குகிறார்கள். இப்படி பிரச்சாரம் செய்வதால் சொத்து படைத்தவர்கள் பிரிட்டிஷ் அரசின் பக்கம் போய் நின்றுவிடும் ஆபத்தும் இருக்கிறது. தவறாக பேராசையுடன் வழிகாட்டப்பட்ட இளைஞர்கள் என்று விமர்சித்த லாலாஜி நேரு மீது தனக்கு நம்பிக்கையிருப்பதாக தெரிவிக்கிறார். அற்புதம். நேருவின் சிந்தனைகளோ ருஷ்யாவின் செல்வாக்கால் தீட்டப்பட்டவை. அங்கிருந்து திரும்பிய பின்னர் அதை நேரு பிரச்சாரம் செய்தார். அவர் நோக்கத்தில் எந்த சந்தேகமும் தேவையில்லை. அவர் என்ன அந்நிய சக்திகளின் மொழியிலா பேசுகிறார்?. நேருவின் கௌரவம் இதனால் மிக உயர்ந்து இருக்கிறது. அவர் விரைவில் காங்கிரஸ் தலைவராகவும் ஆவார்.. இதனால் அவரை எதிர்த்து எழுதமுடியாமல் இளைஞர்கள் குறித்து எப்படி வேண்டுமானாலும் எழுதுகிறார்கள். லாலாஜி அவருக்கு விருப்பமானதை செய்யட்டும்.

சிலவற்றை லாலாஜிக்கு தெளிவு படுத்தவேண்டும். எங்களை எந்த வெளிநாட்டு சக்தியும் தவறாக நடத்தவில்லை. சொந்த நாட்டின் சொந்த அனுபவங்களின் அடிப்படையில்தான் அவர்கள் புரட்சிகரமாக இயங்குகின்றனர். லாலாஜி சிறந்த மனிதர். ஆனால் அவர் முதல் வகுப்பில் செல்பவர். மூன்றாம் வகுப்பில் செல்பவர்கள் பற்றி அவருக்கு தெரியாது. அவர் கிராமங்களுக்கும் தனது நண்பர்களுடன் சிரித்து பேசி வசதியாக மோட்டார் காரில் செல்பவர். ஆனால் ஆயிரக்கணக்கானவர் எப்படி வாழ்கிறார்கள்? Unhappy India எழுதியவரிடம் கோடிக்கணக்கானவர்களின் படுமோசமான வாழ்க்கை குறித்து சொல்வோமா. வியர்வை சிந்த உழைத்தும் பட்டினியால் கோடிக்கணக்கில்.. அவர்களிடம் வெளியிலிருந்து வந்து வயிறு நிரப்ப வழிகளை சொல்ல வேண்டுமா?

வயல்களில் பாடுபட்டும் விவசாயி கடனில் மூழ்குகிறார். இது நம்மை கோபமூட்டாதா? இதற்கு வெளியிலிருந்து ஒருவர் வந்து நமக்கு சொல்லவேண்டுமா? இந்த பொருளாதார ஏற்பாட்டின் கேடுகளை நாம் சொல்ல வேண்டாமா? குற்றமும் கேடுகளும் மலிந்த நிலையில் புரட்சி வேண்டும் என சொல்ல வெளியிலிருந்து நமக்கு யாராவது வரவேண்டுமா என்ன?

இந்த மக்களால் நமக்கும் உலகத்திற்கும் செல்வ வளத்தை உருவாக்க முடியும்? ஏன் நாம் அவர்களை சுமையாக கருதவேண்டும்? சமூக பொருளாதார மாற்றத்திற்காக புரட்சி வேண்டாமா? நம்மிடமே இரக்க மானுட உணர்வு இல்லையா? ருஷ்ய புரட்சி புதிய மாதிரியை தந்துள்ளது என்பது உண்மை. நாம் நம்மிடம் இருக்கிற பிரச்னைகளை தீர்த்துக்கொள்ள ருஷ்ய அறிவாளிகள் உலகம் முன் வைத்துள்ள சிந்தனை பயன்படும் என்றால் எடுத்துக்கொள்ளக் கூடாதா? ஏற்புடைய ஒத்த சிந்தனைகளை தூண்டிவிடல் எனச் சொல்லலாமா? அப்படியெனில் மாஜினி லாலாஜியை தவறாக வழிநடத்திவிட்டாரா? பிரஞ்சு புரட்சி, ருஷ்ய புரட்சி போன்றவைகளிலிருந்து நமது இலட்சியத்தை உருவாக்கிக் கொள்கிறோம். லாலாஜி பிரிட்டிஷாரிடமிருந்து இந்திய பணக்காரர்களிடம் விடுதலையை வாங்கித் தரப் போகிறாரா? 400 ஆண்டுகள் பசி பட்டினியுடன் இரத்தம் சிந்தி போராடிவிட்டு மீண்டும் முதலாளிகளுடன் போராடும் நிலை மோசமானது.

லாலாஜி போன்றவர்கள் சொல்கிறார்கள் நாம் சோசலிச இலட்சியம் பேசுவதால் முதலாளிகள் அரசாங்கம் பக்கம் நிற்பார்கள் என்று. ஆஹா இப்போ மட்டும் அவர்கள் எங்கே நிற்கிறார்கள்? தங்கள் சொத்திற்கு புரட்சியால் ஆபத்து என்று நினைப்பவர்கள் அஞ்சுவார்கள். எத்தனை முதலாளிகள் மாற்றத்தை வரவேற்பார்கள்? பிரிட்டிஷார் அவர்களுடன் நின்றாலும் தங்கள் நாட்டு முதலாளிகளுக்கு இவர்களிடமிருந்து மாற்றித்தரவே நினைப்பார்கள். எனவே புரட்சிதான் இந்துஸ்தான் முதலாளிகளுக்கும் எதிர்கால நிம்மதியைத் தரும். முதலாளிகள் வரவேண்டும் என தொழிலாளர் புரட்சிக்காக காத்திருக்கவும் முடியாது. இளைஞர்கள் இதற்காக கவலைப்படவேண்டாம்.

லாலாஜி போன்றவர்கள் முதலாளித்துவ மதிப்புகளை வைத்துக்கொண்டு பீல்டிலிருந்து வெளியேறிவிட்டனர். முன்பே சுரேந்திர பானர்ஜி வெளியேறிவிட்டார். சாப்ரு சிந்தாமணி அதை இப்போது செய்து வருகின்றனர்.. ஆனால் இறுதியில் தொழிலாளர் புரட்சிதான் வெற்றிகரமாக எழும். சோசலிஸ்ட்களுக்கு வெற்றி கிடைக்கட்டும். புரட்சி நீடுழி வாழட்டும்

மூத்த தலைவர் லாலாஜியின் சிந்தனை நடைமுறையுடன் பகத்சிங் நடத்திய மேம்பட்ட உரையாடலாக இக்கட்டுரை இருப்பதை உணரமுடியும்.

புரட்சியாளர் ராம் பிரசாத் பிஸ்மில் காகோரி வழக்கில் சிக்கி டிசம்பர் 19, 1927ல் தூக்கு என முடிவானது. அதற்கு முன்னர் நாட்டு மக்களுக்கு அவர் தனது மெசேஜ் ஒன்றை தந்துவிட்டு சென்றார். அதை பகத்சிங் வெளியே கொணர்ந்தார். அந்த

செய்தியில் ராம் பிரசாத் பிஸ்மில் அஸ்வகுல்லா கான் பற்றி சொல்கிறார். அஸ்வகுல்லாவிற்கும் அதே நாளில்தான் தூக்கு.

இனி பிஸ்மில் பேசுவதைப் பார்ப்போம்...

அரசாங்கம் அஸ்வகுல்லாவை எனது நெருக்கமான மனிதன் என்கிறார்கள். ஆர்ய சமாஜியான எனக்கு அப்படி ஒரு அருமையான முஸ்லிம் தோழன் right hand man ஆக இருப்பது இந்து முஸ்லீம்கள் தங்கள் சச்சரவுகளை விட்டுவிட நல்ல உதாரணமில்லையா? இந்து இளைஞனைவிட என்னுடன் தியாகம் செய்ய முஸ்லீம் இளைஞன் தலைப்பட்டுள்ளான் என்பதைக் காட்டியுள்ளோம். இனி முஸ்லீகள் நம்பிக்கைக்கு உரியவர் அல்லர் என எவராவது சொல்லமுடியுமா? அந்த தோழன் அனைத்து முஸ்லீம்களின் கௌரவத்தை காத்துள்ளான். எங்களது இறுதி விருப்பம் இந்து முஸ்லீம் ஒற்றுமைதான்.

இந்து முஸ்லீம் ஒற்றுமை அதுவே எங்கள் இறுதி வேண்டுகோள்- அதுவே எங்களுக்கான நினைவு சின்னம் என பிஸ்மில் பேசுவதைக் காண்கிறோம்.

புரட்சிக்காரரின் கண்ணியம் குறித்து பகத்சிங் பதிவு ஒன்றை பார்க்க நேர்ந்தது. அவரின் வழிகாட்டி என கருதப்படும் கர்த்தார் சிங் சரபா பற்றிய பதிவது. கர்த்தார் சிங் சரபா ( சரபா அவரது பஞ்சாப் கிராமம்) 1913ல் ஹர்தயாள் போன்றவர்களுடன் கதர் கட்சியை துவங்கியவர். வழக்கம்போல் புரட்சியாளர்களுக்கு என்ன நேருமோ அதுவே நேர்ந்தது. தேசத்துரோக குற்றச்சாட்டால் கர்த்தார் சிங் நவம்பர் 1915ல் தூக்கிலிடப்பட்டார்.

ஒருமுறை கர்த்தார் சிங் ஆயுதங்கள் வாங்க நிதி தேவை என்ற விவாதத்தில் சக போராளிகளுடன் பங்கேற்றார். நிதி தேவை என்பதற்காக புரட்சிகர நடவடிக்கைகளை தள்ளி போடமுடியாது. கொள்ளை அடித்து நிதி எடுத்துக்கொள்ளமுடியும் என்று அவர் சொல்வதைக் கேட்டு கூட்டாளிகள் தயங்குகின்றனர். பாய் பரமானந்த் இதற்கு உடன்படுவார் எனச் சொல்லி ஏற்கச் செய்கிறார் கர்த்தார் சிங்.

கிராமம் ஒன்றில் செல்வந்தர் வீட்டில் கொள்ளை என நுழைகின்றனர். பணத்தை எடுத்துக்கொண்டு வரும்போது வீட்டிலிருந்த அழகான பெண்ணிடம் கதர் கூட்டாளி ஒருவர் வம்பு செய்ய துணிகிறார். கர்த்தார் அப்பெண்ணின் கையை அந்த மனிதனிடமிருந்து விடுவித்து, இதற்கு நம் இயக்கத்தில் உடனடி மரணம் தான் தண்டனை- சூழல் சரியல்ல. வெளியேறு. வெளியே போகும் முன்னர்

அப்பெண்ணிடம் மன்னிப்புக்கேள்- தாயார் காலில் விழுந்து தவறுக்கு வருந்து என கட்டளையிடுகிறார். அம்மனிதனும் அவ்வாறே செய்கிறார்.

சற்று துணிந்த தாயார் இவ்வளவு கண்ணியமான நீங்கள் இப்படி கொள்ளையில் ஈடுபடுவது அழகா என்கிறார். கர்த்தார் இந்தப் பணம் நாங்கள் சுகபோகமாக வாழ அல்ல. நாட்டின் விடுதலைக்காக பயன்படப்போகிறதென்கிறார். பெண் திருமணத்திற்காக பணம் வைத்திருந்தோம் என தாயார் பெருமூச்சுவிட- கர்த்தார் 'அம்மா எவ்வளவு வேண்டுமோ எடுத்துக்கொள்ளுங்கள்' என அப்படியே வைக்கிறார். அந்தப்பெண்மணியும் வேண்டியதை எடுத்துக்கொண்டு மீதியை நல்ல காரியம் என்கிறீர்கள்- எடுத்துச் செல்லுங்கள் என்று ஆசி வழங்கினார்.

இந்தப்பதிவில் பகத்சிங் எந்தக்கிராமத்தில் இது நடந்தது- எவர் வீடு- எவ்வளவு பணம் போன்ற விவரங்களை தரவில்லை. கொள்ளையின் நோக்கம் சுயநலமல்ல என தெளிவுபடுத்துகிறார். பெண்களிடம் கண்ணியமாக புரட்சிக்காரர்கள் நடந்து கொள்ளும் முன்மாதிரியை வைப்பதைக் காண்கிறோம். 19 வயதிலேயே தூக்கை சந்தித்த கர்த்தார் சிங் பகத்தின் பெரும் நாயகன் ஆனதில் வியப்பு ஏதுமில்லை.

பகத்சிங் ரீடர் இப்படியான ஏராள செய்திகளை தரக்கூடிய ஆவணம். வாய்ப்புள்ளோர் வாசிக்கலாம். வரலாற்றின் பக்கம் ஒன்றை அறியலாம்.

பகத்சிங்கை காவு கொடுத்தாரா காந்தி?

இளம் பகத்சிங்கின் புரட்சிகர உணர்வுகள், போராட்டங்கள், சோசலிச சமூகம் குறித்த வேட்கை பரவலாக அறியப்பட்டவைதான். அவரின் தியாக மரணம் இன்றும் ஆதர்சனமாக இளைஞர்களை கவ்விப்பிடிக்கும் ஒன்றாகவே பார்க்கப்படுகிறது. லாகூர் சதிவழக்கில் பகத்சிங், ராஜகுரு, சுகதேவ் மரணதண்டனை என்பது முடிவான பின்னர் அவர்களை காப்பது காந்தியின் பெரும் பொறுப்பு என்கிற எதிர்பார்ப்பு அதிகமானது. தூக்குத்தண்டனை மாற்றப்படாமல் நிறைவேற்றப்பட்டப்பின்னர் இப்பிரச்சனையில் காந்தி குறித்த விவாதங்கள் நடக்கத்துவங்கின. அவை இன்றும் ஓய்ந்தபாடில்லை. பகத்சிங் போன்ற போராளிகளின் நடவடிக்கைகள், காந்தியின் பங்குபாத்திரம், பிற தலைவர்களின் நிலைப்பாடுகள் இக்கட்டுரையில் சுருக்கமாக விவாதிக்கப்பட்டுள்ளன.

ஒத்துழையாமை-பகிஷ்கரிப்பு போராட்டத்தை காந்தி அறிவிக்கிறார். ரௌலட் சட்டம் ஜாலியன்வாலாபாக் காலத்தில் பஞ்சாப் நுழைய காந்திக்கு அரசாங்கத்தடை இருந்தது. அக்டோபர் 1919ல்தான் தடை நீக்கப்படுகிறது. காந்தி கூட்டம் லாகூரில் என அறிந்து தனது நண்பர்களுடன் பகத்சிங் செல்கிறார். காந்தியின் உரையைக்கேட்டு 9வது படித்துக்கொண்டிருந்த பகத்சிங் பள்ளியிலிருந்து வெளியேறி ஒத்துழையாமை போராட்டத்தில் பங்கேற்கிறார். ஜனவரி 4, 1922 உத்தரபிரதேசம் சௌரி சௌரா பகுதியில் போலீஸ்காரர்களின் ரசனை குறைவான சங்கேதங்களால் போராளிகள் கோபமூட்டப்பட்டனர். காவல் நிலையம் தீக்கிரையானது. போலீஸ்காரர்கள் மாண்டனர். அகிம்சை அறவழிப் போராட்டத்திற்கு நாடு தயாராகவில்லை என போராட்டத்தை காந்தி திரும்ப பெற்றார். ஆறு ஆண்டுகள் கடும் தண்டனை கொடுக்கப்பட்டு அவர் சிறைக்கு அனுப்பப்பட்டார். அந்நிய துணிகள் தீக்கிரையாக்கும் போராட்டத்தில் பகத்சிங் நண்பர்கள் தீவிரமாக பங்கேற்றனர்.

காந்தி அறைகூவலை கேட்டு பள்ளிப்படிப்பை நிறுத்தியதும் காந்தி போராட்டத்தை கைவிட்டதுமான செயல்கள் பகத்சிங்கின் மனப்போராட்டத்தை அதிகப்படுத்தின. நண்பர்கள் மத்தியில் விவாதம் எழுந்தது. ஓரிரு நிகழ்வுகளை காரணம் காட்டி போராட்டத்தை நிறுத்தியது தவறு என பகத் பேசத்தொடங்கினார்..

சர்தார் கர்த்தார்சிங் தனது 19ஆம் வயதில் ஆயுத கலகத்தால் கைதாகி மரணதண்டனை பெற்று உயிர்த்தியாகம் செய்ததும் அவரது உரையும் பகத்சிங்கை கவர்ந்தன. அகிம்சை வழியில் பிரிட்டிஷாரை தூக்கி எறிய முடியாது என்ற எண்ணம் பகத்திற்கு ஏற்பட்டது. லாலா லஜ்பத்ராய் துவாரகாதாஸ் நூலகம் ஒன்றை

அமைக்கிறார். நூலக பொறுப்பாளர் ராஜாராம் சாஸ்திரிக்கும் பகத்திற்கும் ஏற்பட்ட நல்லுறவால் அவர் பரிந்துரைத்த புத்தகங்களை படிக்கிறார் பகத். மார்க்ஸ், பகுனின் புத்தகங்கள் அறிமுமாயின, பகுனின் அவரை கவர்கிறார். சோசலிச கோட்பாடுகள் அதற்கான புரட்சிப்போராட்டங்கள் ஆதரிக்கப்பட வேண்டியவை என்ற கருத்திற்கு பகத்சிங் வந்து சேர்கிறார்.

நூலகத்திற்கு வந்த புதிய புத்தகம் அனார்க்கிசம் குறித்த கட்டுரைகள் அவருக்கு தரப்படுகிறது. அதில் இடம் பெற்ற வன்முறையும் உளவியலும் பிரஞ்சு அனார்க்கிசவாதி வேலன் அறிக்கையும் அவரை கவர்கின்றன. தொழிலாளி வர்க்கம், தொழிற்சங்கங்கள் குறித்த பதிவையும் பிரஞ்சு சட்டமன்றத்தில் அவரால் வீசப்பட்ட குண்டுகுறித்த பதிவையும் பகத் அறிகிறார்.. நூலகர் சாஸ்திரியிடம் நாமும் இவ்வாறு செயல்படவேண்டும் என்கிறார் பகத். பொது இடங்களில் இப்படிப்பட்ட கருத்துப்பகிர்வு கூடாது என சாஸ்திரி எச்சரிக்கை உணர்வை தருகிறார்.. இப்புத்தகம் 60க்கும் மேற்பட்ட முறை நூலகத்திலிருந்து பகத் பெயரால் பெறப்பட்ட செய்தியை நாம் அறிய முடிகிறது.

காந்திய இயக்கத்தால் சாதிக்கமுடியாது என பகத்சிங் நம்பத்துவங்கினார். மதன்லால் திங்கராவின் செயலை காந்தி ஏற்கவில்லை. தவறான வழியில் செய்யப்படும் தியாகம் என அது பற்றி அவர் கருத்துக்கூறி இருந்தார். பகத்சிங்கிற்கோ அது ஈர்ப்பை தந்தது.

இந்துஸ்தான் ரிபப்ளிக் அசோசியேசன் 1923ல் ஏற்படுத்தப்பட்டு சச்சீந்திர சன்யால் மானிபெஸ்டோ வெளியிட்டார். யுனைட்டேட் ஸ்டேட்ஸ் ஆஃப் இந்தியா எனும் குடியரசை ஆயுதபுரட்சி மூலம் உருவாக்குவது திட்டமாக சொல்லப்பட்டது. இதன் மூலம் சுரண்டலை ஒழிக்க முடியும் என தெரிவித்தனர். கதர் இயக்கம், இந்துஸ்தான் சோசலிஸ்ட் ரிபப்ளிக்கன் அசோசியேஷன் மூலம் வளர்கிறார் பகத்சிங்.

லாகூர் ரகசிய புரட்சிகரகுழுவில் முக்கிய தோழர்களாக சந்திரசேகர் ஆசாத், பகத்சிங், ராம்பிரசாத் பிஸ்மில், ராஜேந்திர லாஹிரி, அஷ்வகுல்லாகான், பதுகேஸ்வர் தத் செயல்பட்டுவந்தனர். தங்களது நடவடிக்கைகளுக்கு நிதி கிடைப்பதில் உள்ள சிரமங்களை தீர்த்திடும் வகையில் அரசாங்க நிதியை கொள்ளையிடுவது என முடிவெடுத்தனர். ஆக 9 1925 லக்னோவிற்கு மிக அருகாமை ககோரியில் தங்கள் இடுப்பு துப்பாக்கிகளுடன் அரசாங்க நிதி ரூ8600யை கொள்ளயிட முடிந்தது. ஆனால் அதற்கு அவர்கள் பெரும் விலை கொடுக்க வேண்டியதானது. பல புரட்சியாளர்களுடன் பிஸ்மில்லும் கைதானார். ராம்பிரசாத் பிஸ்மில்,

ராஜேந்திரலாஹிரி, அஷ்வகுல்லா, ரோஷன்சிங் ஆகிய தோழர்களுக்கு மரணதண்டனை விதிக்கப்பட்டது.. அவர்களை தப்பவைத்து மீட்டிட பகத்சிங், சந்திரசேகர் ஆசாத், சுகதேவ், ராஜகுரு, பதுகேஷ்வர் எடுத்த முயற்சிகள் பலனளிக்கவில்லை. புரட்சியாளர்கள் நால்வரும் தூக்கு கயிற்றில் வீரமரணம் அடைந்தனர்.

சைமன் கமிஷன் திரும்பிப் போ இயக்கம் 1928ல் தீவிரமாக எழுந்தது. லாலாலஜ்பத்ராய் தலைமையில் நடந்த போராட்டத்தில் அவர் கடுமையாக பிரிட்டிஷ் போலீசாரால் தாக்கப்பட்டார். இதன் காரணமாக அவர் வலுவிழந்து செப்டம்பர் 1928ல் உயிர் இழந்தார். கர்னல் வெட்ஜ் உட் லாலாஜியின் மரணம் போலீஸ் தாக்குதலால் நிகழ்ந்ததா-நியாயமான விசாரணை தேவை என்கிற கேள்வி எழுப்பியபோது யேர்ல் வின்டர்சன் என்கிற அரசாங்க அதிகாரி அவ்வாறில்லை எனவும் விசாரணை ஏதும் தேவையில்லை எனவும் நிராகரித்தார். இந்த இயக்கத்தில் பங்கேற்ற பகத்சிங் போன்ற இளைஞர்கள் மனத்தளவில் பெரிதும் பாதிப்புக்குள்ளாயினர். பிரிட்டிஷாருக்கு பாடம் புகட்ட விரும்பினர்.

ஃபெரோஷா கோட்லாவில் பகத்சிங், சுகதேவ், குந்தன்லால், சிவ வர்மா, ஜெயதேவ் குப்தா, விஜய் குமார் சின்ஹா போன்ற புரட்சியாளர்கள் கூடினர். பகத்சிங் அக்கூட்டத்தில் பல்வேறு மாநில பிரதேசங்களிலுள்ள புரட்சிகர குழுக்கள் இணைந்து செயலாற்ற வேண்டிய அவசியம் உள்ளது என்பதை தெரிவித்தார். நாம் ஹிந்துஸ்தான் சோசலிச குடியரசு அசோசியேசன் என்ற அமைப்பின் பெயரால் இயங்கலாம். ஆசாத் பங்கேற்க முடியாவிட்டாலும் அவர் சேர்மன் என்றும், பஞ்சாப் பிரிவிற்கு சுகதேவ், ராஜஸ்தான் பிரிவிற்கு குந்தன், உத்தரபிரதேச பிரிவிற்கு சிவ வர்மா, பீகாருக்கு ஃபனிந்திர நாத் பொறுப்பாக்கப்பட்டனர். அனைத்து பிரதேச ஒருங்கிணைப்பு பொறுப்பிற்கு பகத், விஜயகுமார் நியமிக்கப்பட்டனர். அரசு வங்கியில் கொள்ளை என்பதும் முடிவானது.

டிசம்பர் 10, 1928ல் அசோசியேஷன் கூடி ஸ்காட் போலீஸ் அதிகாரியை கொன்று பழி தீர்ப்பது என முடிவெடுக்கிறது. போலீஸ் நிலையத்திற்குள்ளேயே அவனை கொல்ல அனுமதி வேண்டும் என்கிறார் ராஜகுரு. ஆசாத் அறிவுரைக்குப் பின்னர் பொருத்தமான நேரத்திற்காக புரட்சியாளர்கள் காத்திருந்தனர். டிசம்பர் 17 அன்று காவல்நிலையத்திலிருந்து வெளிவந்த போலீஸ் அதிகாரி ஜான் சாண்டர்ஸை ராஜகுரு தலையில் சுடுகிறார். பகத்சிங் தொடர்ந்து சுடுகிறார். பகத்தை பிடிக்கவந்த சந்தன் சிங் என்கிற போலீஸ்காரர் ஆசாத்தால் சுடப்படுகிறார். அருகாமையில் இருந்த

சைக்கிளில் ஏறி போராளிகள் தப்புகின்றனர். சாண்டர்ஸை ஜேம்ஸ் ஸ்காட் என நினைத்து கொன்றாலும் தோழர்கள் கடமையை செய்ததாக கருதினர்.

பொது பாதுகாப்பு மசோதா, தொழிற் தகராறு மசோதாக்களை கொண்டுவர பிரிட்டிஷ் தீவிரமாக இருந்தது. மசோதா மத்திய சட்டமன்றத்தில் கொண்டுவரும் நாளில் குண்டெறிவது என்கிற பகத்சிங் ஆலோசனை ஏற்கப்பட்டது. பகத்சிங் வெளியே இருப்பது அமைப்பிற்கு தேவை என்றும் , பதுகேஷ்வரும், விஜய் சின்ஹாவும் சட்டமன்றத்திற்குள் குண்டெறிவது எனவும் அமைப்பு முடிவெடுத்தது. துண்டறிக்கைகள் மூலமல்ல நமது வாழ்வை தியாகம் செய்வதே பெரும் பிரச்சாரமாகவும் விழிப்புணர்வை உருவாக்குவதாகவும் அமையும் என பகத்சிங் கருதினார். அசெம்பிளிக்கு நுழைவு அனுமதி பெறுவதற்கான ஏற்பாட்டை ஜெயதேவ் கபூர் செய்தார்.

1929 ஏப்ரல் 8 அன்று சட்டமன்றம் கூடியது. மோதிலால் உட்பட தலைவர்கள் இருந்தனர். மசோதாக்கள் அறிமுகம் துவங்கியவுடன் பதுகேஷ், பகத்சிங் இருவரும் குண்டுகளை யாருக்கும் காயம் ஏற்படாதவாறு எறிந்தனர். பதட்டம் பரவியது. அனைவரும் ஓடத்துவங்கினர். மசோதா தாக்கல் செய்த ஜான் ஷீஸ்டர் மேசைக்கு கீழே பதுங்கிக் கொண்டார். தோழர்கள் இன்குலாப் முழக்கமிட்டனர். ஜின்னா, மாளவியா, விதல்பாய் படேல் அசெம்பிளியில் அமர்ந்திருந்தனர். போலீசார் முன்னேறி வந்தனர். போராளிகள் கைதாக தயார் என்பதற்கான செய்கைகளை காட்டினர். இருவரும் கைது செய்யப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டனர்.

ஏப்ரல் 8 1929 குண்டு வீசப்பட்டப்பின்னர் பகத்சிங்கும், தத்தும் தப்பிக்க நினைக்கவில்லை. சார்ஜெண்ட் டெர்ரியிடம் நீங்கள் கைது செய்துகொள்ளலாம் என்றனர். பகத்சிங்கிடம் இருந்த துப்பாக்கியை எடுக்கவும் எந்த தடையும் செய்யவில்லை. இதுவே பின்னர் அவர்களது சாண்டர்ஸ் கொலை வழக்கில் குற்றத்தை உறுதிப்படுத்த தடயமானது. நாங்கள் பிரிட்டிஷ் ஆட்சிமுறைக்கு எதிராகவே, கேளா காதினரை கேட்க செய்யவே குண்டு வீசினோம். எவரையும் கொல்வது நோக்கமல்ல என்றனர். புரட்சியாளர்களின் உலகளாவிய நெஞ்சுரத்தை பேசிய அவர்களது அறிக்கை வெளியிடப்படக்கூடாது என அரசாங்கம் கருதியது. ஆனால் பயானீர் அதற்கு முன்பே அதை வெளியிட்டது.

அசெம்பிளி குண்டு வழக்கில் ஜூன் 12 1929 அன்று 'அந்தமான் நாடுகடத்தல்' என்கிற தண்டனை வழங்கப்பட்டது. உயர்நீதிமன்றத்திற்கு ஆசப் அலி வழக்கை எடுத்துச் சென்றார். எங்களை கொலையாளிகள் என அழைக்கக்கூடாது என்றார் பகத்சிங்.

இதனிடையில் குண்டுகள் தயாரிக்கப்படும் இடம் ஒன்றை போலீசார் கண்டறிந்து HSRA தோழர்கள் கைது செய்யப்பட்டனர். பகத்சிங், தத் இதில் தொடர்புடையவர்கள் என்பது கண்டறியப்பட்டது., லாகூர் சதி வழக்கு என புகழ்வாய்ந்த வழக்கில் சாண்டர்ஸ் கொலை, வங்கிக் கொள்ளை, அசெம்பிளியில் குண்டுவீச்சு போன்ற குற்றங்கள் இணைக்கப்பட்டன.

சிறைக்கைதிகளுக்கு நேரும் அவலங்களை, கொடுமைகளை கண்டித்து லாகூர் சிறையில் ஜூன் 14,1929 முதல் பட்டினிப் போரை தோழர்கள் மேற்கொள்கின்றனர். சுகதேவ், ராஜகுரு, ஜதிந்திரர், ஜெயதேவ், அஜாய்கோஷ், சிவவர்மா அச்சிறையில் பகத்சிங்குடன் பட்டினிப்போரில் ஈடுபடுகின்றனர். மூத்த போராளி பாபா சோகன் சிங் சிறையில் 1915 முதலே இருந்து வந்தார். சாண்டர்ஸ் கொலை வழக்கும் நடக்கத் துவங்கியது. பட்டினி பலவீனத்துடன் மருத்துவ படுக்கையிலேயே பகத்சிங், பதுகேஷ்வர் இருவரையும் நீதிமன்றம் அழைத்து செல்கின்றனர். தேசபக்தர்களுக்கு கைவிலங்கு போடப்படுவதை எதிர்க்கிறார் பகத்.

பகத்சிங், பதுகேஸ்வர், ஜதிந்திரநாத் ஆகியோர் லாகூர் பார்ஸ்டல் சிறையில் பட்டினிப்போராட்டத்தில் ஈடுபட்டிருந்தபோது நேரு அவர்களை ஆக 9 1929ல் சந்தித்தார். கைதிகளின் நிலைமைகளை மேம்படுத்த அவர்கள் போராடிவந்தனர். மோதிலால் நேருவை கண்டவுடன் அவர்கள் ஏகாதிபத்தியம் வீழட்டும்- புரட்சி ஓங்குக என முழக்கமிட்டனர். சிறைக்கைதிகளின் நிலையை மேம்படுத்தக்கோரி போராளிகள் பட்டினிப்போர் மேற்கொண்டனர். மிக உயர்ந்த இலட்சியதாகமும் சுதந்திர வேட்கையும் கொண்ட இவர்களை கிரிமினல்போல் நடத்துவது சரியல்ல என மதன்மோகன் மாளவியா அசெம்பிளியில் கண்டித்தார். அவர்களின் நியாயமான கோரிக்கைகளை பரிசீலிக்க வேண்டினார். ஜதிந்தர் தன்னை வங்காளி மாதிரி நடத்தவேண்டாம். நான் இந்தியன் என குறிப்பிட்டிருந்தார். . அரசாங்கம் நீரோ போல் நடந்துகொண்டது என மோதிலால் விமர்சித்தார்.. புருஷோத்தம் டாண்டன் இனி இப்படிப்பட்ட சிறை அவமானங்களை சகிக்ககூடாது என எச்சரிக்கைவிடுத்தார். சிறை விசாரணை கமிட்டி அமைக்கப்பட்டு சில மேம்பாடுகளை அது பரிந்துரைந்தது.

ஜதிந்தர் தாஸ் நிலைமை மோசமானது . பட்டினியால் இரத்த ஓட்டம் நின்றது. கை கால் விளங்காமல் போனது. பார்க்கவந்த டாக்டர் கோபி சந்த பார்கவா ஏன் மருந்து தண்ணீர்கூட மறுக்கிறீர்கள் எனக்கேட்டார். அரசியல் கைதிகள் நிலைமேம்பட நாட்டிற்காக என் உயிர் போகட்டும், மன உறுதி இருக்கும்வரை உயிர்வாழ்வேன் என்றார் ஜதிந்தர். போராட்டத்தை நிறுத்தினால் ஜதிந்திரரை விடுதலை செய்யலாம் என்றது சிறை நிர்வாகம். பகத்சிங் போராட்டத்தை நிறுத்தி ஜதிந்திரரை காக்க

விரும்பினார். சிறை நிர்வாகம் ஏமாற்றுவதாக உணர்ந்த பகத்சிங் தனது பட்டினிப்போரை நீட்டிக்கிறார். செப் 13 அன்று ஜதிந்திரரை மரணம் கவ்வியது. இந்திய விடுதலைபோரின் மகத்தான தியாக நாளாக அந்நாள் மாறியது.

சாண்டர்ஸ் வழக்கில் 24 பேர் குற்றவாளிகளாக ஆக்கப்பட்டனர். பகத், சுகதேவ், ராஜகுரு, பதுகேஷ்வர், கமல்நாத் திவாரி, கிஷோர்லால், சிவ வர்மா, அஜாய்கோஷ், குந்தன்லால் போன்றவர்கள் கைது செய்யப்பட்டிருந்தனர். ஆசாத், பகவான் தாஸ், பகவதி வோரா போன்றோர் தலைமறைவாய் இருந்தனர். ஜெய்கோபால், மன்மோகன் பானர்ஜி, லலித் முகர்ஜி போன்றவர் அரசு தரப்பு சாட்சிகளாக மாறிப்போயினர். செப் 12 1929ல் நீதிபதிகளுக்கு கட்டற்ற அதிகாரம் தரக்கூடிய மசோதா ஒன்றை- குற்றம் சாட்டப்பட்டவர்களை பார்க்காமல் கூட வழக்கு நடத்திட அதிகாரம் தரும் மோசமான மசோதா ஒன்றை கொணர்ந்தனர். மோதிலால்நேரு இதைக் கடுமையாக எதிர்த்தார்.

இர்வின் பிரபு மூவர் விசாரணை கமிட்டி ஒன்றை லாகூர் சதி வழக்கிற்காக மே1,1930ல் அமைத்தார். இதை சட்ட விரோதமானது என பகிஷ்கரிக்க பகத்சிங் முடிவெடுத்தார். பின்னர் தோழர்கள் அறிவுரைப்படி லாலா துனிசந்த் என்பவர் வாதாட ஒப்புதல் தருகிறார். மே 12, 1930ல் இன்குலாப் முழக்கத்துடன் விசாரணைக்கூடத்திற்கு புரட்சிகர தோழர்கள் வருகின்றனர். அவர்கள் போலீஸ்காரர்களால் அங்கு தாக்கப்படுவதை கண்டிக்கும் வகையில் மூவர் கமிட்டியில் ஒருவரான நீதிமான் அகாஹைதர் நீதிமன்றத்திலிருந்து வெளியேறுகிறார். தனது மாறுபட்ட கருத்தையும் பதிவு செய்கிறார். ஆகஸ்ட் 26, 1930ல் வழக்கு முடிவிற்கு வருகிறது.

அக்டோபர் 7, 1930 அன்று தீர்ப்பாய பிரதிநிதி சிறைச்சாலை வந்து தீர்ப்பின் 68 பக்க நகலை வாசிக்கிறார். பகத்சிங், ராஜகுரு, சுகதேவ் மூவருக்கும் மரணதண்டனை என்பது படிக்கப்படுகிறது. அதிர்ச்சி நிலவுகிறது. மூவரும் புன்முறுவல் செய்கின்றனர். இன்குலாப் முழக்கம் இடுகின்றனர். மற்றவர்களுக்கு காலவரையுடன் கூடிய தண்டனைகள் விதிக்கப்பட்டன. பகத்சிங் புரட்சிகர குழுவில் அஜாய் கோஷ் அவர்களுக்கு 3 ஆண்டுகள் தண்டனை என அறிவிக்கப்படுகிறது. அஜாய் பின்னாட்களில் இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுச்செயலராக ஆனார். நாடு முழுதும் இளைஞர்களின் போராட்டங்கள் எழுகின்றன. தீர்ப்பை கண்டித்து பொதுக் கூட்டங்கள் சென்னை உட்பட பெரு நகரங்களில் நடக்கின்றன. ஆயுள் தண்டனை பெற்ற பதுகேஷ்வர் தீர்ப்பறிந்து மனநிலை பாதிக்கப்படுகிறார்.

பகத்சிங், சுகதேவ், ராஜகுரு ஆகிய தோழர்களுக்கு பிரிட்டிஷ் நீதிமன்றம் தூக்கு தண்டனை விதித்து மார்ச் 23 1931 அன்று அதை நிறைவேற்றியது. வன்முறை மீது நம்பிக்கையற்ற காந்தி பகத்சிங்கை காப்பாற்ற உறுதியான நடவடிக்கைகளை எடுக்கவில்லை என்கிற விமர்சனம் பரவலாக சென்றது.

மஹாத்மாவின் சிந்தனை எப்படி இருந்தது? பகத் வழக்கு குறித்து எப்படி எதிர் வினை ஆற்றினார்? புகழுடன் விளங்கிய மஹாத்மா தனது அகிம்சை கொள்கை காரணமாக பகத்சிங் பிரச்சினையில் emotional ஆக involve ஆகவில்லை என விமர்சனம் வருவதைக் கேட்கிறோம். இறுதிகட்டம் வரை பல்வேறு முயற்சிகளை செய்தார்- அவர் வெற்றி பெறவில்லை என சிலர் சொல்வதையும் பார்க்கமுடியும். இர்வினிடம் அதிகமான அழுத்தம் தந்தார் எனவும்-வைஸ்ராய் அவரை வஞ்சித்துவிட்டார் எனவும் வேறுபட்ட பார்வைகள் நமக்கு கிடைக்கின்றன.

இர்வின் காந்தி இருவரும் நினைத்திருந்தால் தூக்குதண்டனயை மாற்றியிருக்கமுடியும் என்கிற பொதுவான கருத்தும் நிலவுகிறது. The Assumption is questionable- பிரிட்டீஷ் சிஸ்டம் என்கிற சூழலை வைத்து இதை நாம் பார்க்கவேண்டும்- புரிந்துகொள்ளவேண்டும். பகத்சிங் தூக்குப் பிரச்சனையில் காந்திய அரசியலை மட்டும் விமர்சிப்பவர்கள் பிரிட்டிஷ் சட்டமுறைக்கு பகத்சிங் பலியானவர் என சேர்த்துப் பேசுவதில்லை.

காந்தி இர்வினை சந்தித்து Remission of death sentence என்பதைக்கோரி வருகிறார். என்பதை அறிந்த பஞ்சாப் கவர்னர் காந்தியின் முயற்சி வெற்றிபெறக்கூடாது என எண்ணினார். அவர்கள் மார்ச் 24 என்பதற்கு ஒருநாள் முன்னதாக மார்ச் 23 அன்றே இரகசியம் காக்கப்பட்டு தண்டனையை நிறைவேற்றுவது என முடிவெடுக்கின்றனர்.

காந்தி மார்ச் 23 அன்றும் விடியற்காலை மணி ஒன்றுக்கு நீண்ட கடிதம் ஒன்றை இர்வினுக்கு எழுதுகிறார். மாளவியா, நேரு, தேஜ்பகதூர் சாப்ரு ஆகியோரும் பெருமுயற்சி எடுக்கின்றனர். காந்தி மார்ச் 26 1931 கராச்சியில் கூடிய காங்கிரஸ் அமர்வில் எடுக்கப்பட்ட முயற்சிகளை விளக்குகிறார். முயற்சி பலனளிக்கும் என நம்பியிருந்ததாகவும் அவர் தெரிவித்தார். மார்ச் 23 அன்று பகத்சிங்கின் குடும்பத்தாரை காந்தி சந்திக்கவும் முயற்சிகள் எடுக்கப்பட்டிருந்தன. காந்தியை வில்லனாக சித்தரிக்கும் முயற்சிகள் பின்னரும் நடைபெறாமல் இல்லை.

II

காந்தி- இர்வின் இருவரையும் சகல அதிகாரங்களும் கொண்ட தனிநபர்களாக பார்ப்பது சரியா?. காந்திக்கு பகத்சிங் உயிர்மேல் அக்கறையே இல்லையா? வெளியில் அம்மாதிரியான இளைஞர்களின் தேசபக்தியை பாராட்டிவிட்டு செயல்படாமல்

இருந்தவரா காந்தி? அவர் எடுத்த நடவடிக்கைகள் முழுமனதுடன் எடுக்கப்படவில்லையா? பகத்சிங் பிரச்சனையில் காந்தி ஏமாற்றியவரா? இவை போன்ற கேள்விகள் தொடர்ந்து பொதுவெளிகளில் ஆதாரத்துடனும் ஆதாரமில்லாமலும் விவாதிக்கப்படுகின்றன

பகத்சிங்கிடம் மார்க்சியம் லெனினியம் மட்டுமல்லாது பல்வேறு சிந்தனைகளின் தாக்கம் செல்வாக்கு செலுத்தியது. தனது சொந்த அனுபவங்களின் மூலம் அவர் கற்கவும் செய்தார். தனது உயிர்தியாகத்தால் நாட்டின் மனசாட்சியை அவரால் உலுக்கமுடிந்தது. இந்த மாதிரியான இளைஞர்கள் காட்டிய போர்க்குணமிக்க தேசியம் ஆபத்தான போக்கு என காந்தி உறுதியாக நம்பினார். காந்தி மார்ச் 7, 1931 பொதுக்கூட்ட உரையில் ஆயுதம் ஏந்தியவர் அதனாலேயே மரணிக்கப்படலாம் எனப் பேசினார். வெளியில் பரிவுகாட்டுவது போல் பேசிவிட்டு வைஸ்ராயுடன் சேர்ந்து தூக்கிற்கு பகத்சிங் செல்ல காந்தி நின்றுவிட்டார் என்கிற விமர்சனமும் எழாமல் இல்லை.

வழக்கின் விசாரணைப்படி பார்த்தால் சுகதேவ் உண்மையான மூளையாக செயல்பட்டார் எனத் தெரியவந்தது. அவர் அந்த அளவிற்கு பெரிதாக மக்கள் மத்தியில் கொண்டாடப்படவில்லை. அவருக்கு வரலாற்று வெளிச்சம் போதுமான அளவு கிடைக்கவில்லை என்கிற விமர்சனமும் சேர்ந்தே நிலவுகிறது.

சுதந்திரம் என்பதை பிறரை கொன்று அடையமுடியாது என்பதை 1909லேயே தனது கருத்தாக வெளிப்படுத்தியவர் காந்தி. பிரிட்டிஷ் வைஸ்ராய் அல்லது குடும்பத்தார்- அதிகாரிகள் மீது வன்முறை தாக்குதல் நடந்தபோதெல்லாம் அதை கண்டித்தவர் காந்தி. இர்வின் துணைவியார் மீது டெல்லியில் டிசம்பர் 23, 1929ல் குண்டு வீசப்பட்டதை கண்டிக்கும் தீர்மானத்தை அடுத்து நடந்த லாகூர் காங்கிரஸ் அமர்வில் அவர் முன்மொழிந்தார். அதற்கு எதிர்ப்பு இருந்தது. ஆனாலும் அதன் நியாயத்தை எடுத்துச்சொல்லி காந்தி தீர்மானத்தை ஏற்கவைத்தார்.

வைஸ்ராய் குண்டு வெடிப்பில் தப்பிய நிகழ்விற்கு பின்னர் காந்தி எழுதிய ’கல்ட் ஆப் பாம்’ என்பதற்கு பகவதி சரண் ’தி பிலாசபி ஆப் பாம்’ என பதில் ஒன்றை எழுதினார். அது அமைப்பின் தலைவர் என்ற பெயரில் வெளியானது. காந்தி அதையும் யங் இந்தியாவில் வெளியிடுகிறார்.

“The philosophy of bomb" Satyagraha is insistence upon truth. why press, for the acceptance of truth by soul force alone? why not add physical force also to it? While revoultionaries stand for winning

independence by all the forces physical as well as moral, at their command, the advocates of our soul force would like to ban the use of physical force.. ”

”உண்மையின் வடிவாக சத்தியாக்கிரகம் பேசப்படுகிறது. அது ஆன்ம சக்தி என சொல்லப்படுகிறது. அது ஆன்மாவின் சக்தியாக மட்டும்தான் வெளிப்படவேண்டுமா- உடலின் சக்தியாக வெளியிடப்படக்கூடாதா- அதில் உண்மை இருக்கக் கூடாதா? கேள்வி வன்முறையா இல்லையா என்பதல்ல- சத்தியாக்கிரகத்திற்கு ஆன்ம சக்தி மட்டும்தானா- உடல் சக்தியும் உண்டா இல்லையா என இளைஞர்கள் அதில் கேள்வி எழுப்பினர். ( the question is whether you will have soul force plus physical force or soul force alone not violence.).

எங்களுக்கு மக்களைப்பற்றி என்ன தெரியும் என கேட்கப்படுகிறது. காந்தி ரயில் பாதைகளில் மோட்டார் செல்லும் பாதைகளில் பயணித்திருப்பார். காய்ந்த சருகுகளை கொளுத்தி அந்த வெளிச்சத்தில் அமர்ந்து பேசும் விவசாயக் குடும்பங்களுடன் உட்கார்ந்து காந்தி அவர்கள் தேவையை உணர்ந்திருப்பாரா? பாக்டரிக்கு சென்று தொழிலாளர்களை சந்தித்து பேசியிருக்கிறாரா?. நாங்கள் இதைத்தான் செய்து வருகிறோம். எனவே மக்களை அறிவோம் “ என ஆவேசமாக இளைஞர்கள் காந்திக்கு எதிர்வினையை தந்தனர். இது காந்தியின் வேலைமுறை பயணங்களை அறிந்தவர்களுக்கு அத்தோழர்கள் செய்துகொள்ளும் over claim என்பது புரியும்.

பகத்சிங் குறித்த அக்கறை காந்திக்கு இருந்தது என குல்திப்நாயர் தெரிவிக்கிறார். ஆனால் பகத்சிங்கின் வன்முறை பாதையை அவர் ஏற்கவே இல்லை. பகத்திற்கு சிலை எழுப்பும் இயக்கத்திலும் அவர் பங்கேற்கவில்லை. காந்தி இன்னும் சற்று தீவிர முயற்சியை எடுத்திருந்தால் பகத்சிங்கை காப்பாற்றியிருக்கலாம் என்பது எச் ஆர் பக் ஷியின் கருத்தாக இருக்கிறது. டி எஸ் டியோலும் பகத்சிங் விடுதலையை நிபந்தனையாக்கி இர்வினுடன் காந்தி பேச்சுவார்த்தை நடத்தவில்லை என்கிறார். பகத்சிங் போன்றவர்கள் வலுப்பெறுவதை காந்தி விரும்பவில்லை என்பது ஜெனரல் மோகன்சிங் பார்வையாக இருக்கிறது. இவையெல்லாம் அவர்களின் perceptions-expectations என்றே புரிந்துகொள்ளப்படவேண்டியுள்ளது.

மரணதண்டனையை மாற்றி ஆயுள் தண்டனையாக்கலாம் என்கிற காங்கிரசின் கருத்தை காந்தி ஏற்றார். அதை அமைதி திரும்புவதற்கான நிபந்தனையாகக் கூட வைக்கலாம் என காங்கிரஸ் செயற்குழு கருதியது. ஆனால் காந்தி நேர்மையாக கராச்சி காங்கிரஸ் அமர்வை எதிர்கொள்ள விரும்பினார். ஒருவேளை அந்த இளைஞர்களுக்கு மரணதண்டனை நிறைவேற்றப்படவேண்டும் என்பது உறுதியானால்

அது கராச்சி சந்திப்பிற்கு முன்பே நடந்துவிடவேண்டும் (If the boys should be hanged they had better be hanged before the Congress session than after it) என்றார் காந்தி.

காந்தி முயற்சிகள் எடுத்தார் என்றாலும் வைஸ்ராய் அவரை ஏமாற்றிவிட்டார் என புரிந்துகொண்டவர்களும் இருக்கின்றனர். இக்கருத்தை கே கே கல்லு பிரதிபலிக்கிறார். இர்வின் சுயசரிதை எழுதிய அல்லாம் கம்பெல் ஜான்சன் இர்வின் காந்தி உடன்பாட்டிற்கு பின்னர் பகத்சிங் தூக்கு குறித்த உரையாடல் இரு ராஜதந்திரிகளுக்குள் நடப்பது போல் இல்லை என்ற பதிவைத் தருகிறார். ஆனால் அப்படியெல்லாம் தான் ஏமாற்றப்பட்டுவிட்டதாக காந்தியடிகள் கருத்துக் கூறவில்லை என்பதையும் காண்கிறோம்.

" Sir Herbert Emerson, the Home Member who was called upon to play a prominent role in Delhi negotiations records listening with amusement to Irwin and Gandhi after agreement had been reached by them that Bhagat singh must be executed, engaged in a prolonged decision not as between two statesman but as between two saints on the sanctity of human life"

மனசாட்சியுடன் போராடிய இர்வின் இரவெல்லாம் தூங்கவில்லை. மறுநாள் தூக்குத்தண்டனை மாற்றம் என்பதை அவர் ஏற்கவில்ல என்கிறார் ஆண்ட்ரு ராபர்ட்ஸ். காந்தி தண்டனையை நிறுத்திவைக்கத்தான் கோரினார். இரத்து செய்யக்கோரவில்லை. காந்தி கடைசிவரை சென்று முயற்சிக்கவில்லை. இர்வின் காந்தி உரையாடல்களை வெளிப்படையாகவும் அவர் தெரிவிக்கவில்லை என ஏ ஜி நூரணி எழுதினார். நூரணியும் தன் எதிர்பார்ப்பையே காந்தி மீதான குற்றச்சாட்டாக இங்கு வைப்பதைக் காண்கிறோம்.

காந்தியின் மேல் சுமத்தப்பட்ட குற்றசாட்டுகளுக்கு பதில் தரும் வகையில் காந்தி அனைத்து முயற்சிகளையும் செய்ததாக அனில் மௌரியா தெரிவிக்கிறார். காந்தி தூக்குத்தண்டனையை மாற்றக் கோரினார். மகாதேவ தேசாயின் குஜராத் குறிப்புகளின்படி பார்த்தால் இர்வின் உடன்பாட்டின் அம்சமாக இடம்பெற செய்யவும் காந்தி முயற்சித்தார் என்பது மௌரியா தரும் தகவல். உரிய காலத்தில் முயற்சி எடுக்கவில்லை- மார்ச் 3 1931ல்தான் எடுத்தார் என்கிற நூரணி தகவல் சரியானதல்ல. காந்தி பிப் 19 முதல் பெருமுயற்சிகளை எடுத்தார் என்பது மௌரியா முன்வைக்கும் வாதம்.

காந்தி பெரும் முயற்சிகளை எடுத்தார். வைஸ்ராய் எந்த உறுதிமொழியையும் தராவிட்டாலும் தண்டனைக் குறைப்பு- ரிமிஷன் கிடைக்கும் என காந்தி நம்பியதாக

மீராபென் தெரிவித்துள்ளார். பகத்சிங் கலகக்காரர் அதற்குரிய தண்டனை தரப்படலாமே தவிர மரணதண்டனை வேண்டாம் என்றார்.

அனைவராலும் மதிக்கப்படும் ஆய்வறிஞர் பிரேம் பசின் காந்திக்கு இர்வின் உறுதிமொழி தந்ததாக எழுதினார். அப்படி உறுதிமொழி பெறப்பட்டதை காந்தி காங்கிரஸ் செயற்குழுவில் பகிர்ந்துகொண்டுள்ளார். ஆனால் இச்செய்தி வெளிச்சென்றால் முடிவு எடுப்பதில் சிக்கல் நேர்ந்துவிடலாம் என்கிற எச்சரிக்கையும் தரப்பட்டது. ஆனால் பஞ்சாப் பிரதிநிதி அச்செய்தியை பத்திரிகைக்கு தெரிவித்தார். இதனால் பிரிட்டனின் ஆளும் தலைமை கொதிப்பு அடைந்து ஒட்டுமொத்த ராஜினாமா செய்துவிடுவோம் என இர்வினுக்கு எச்சரிக்கை செய்தியை அனுப்பியதாக பிரேம் சொல்கிறார். பஞ்சாப் அரசாங்க பார்வையில் பகத்சிங் தூக்கு பிரச்சனையை அணுகவேண்டுமே தவிர காந்தியை முன்வைத்து பார்க்கக்கூடாது என ஆளும் தரப்பினர் அறிவுறுத்தினர்.

காந்தி ஜனவரி 26 1931ல் விடுதலையான பின்னர் பிப்ரவரி 18 முதல் மார்ச் 5 வரை இர்வினுடன் பேச்சுவார்த்தை நடந்தது. எட்டு சுற்றுக்கள் 221/2 மணிநேரம் பேச்சுவார்த்தை நடந்ததாக அறியமுடிகிறது. மார்ச் 5 காலை எட்டப்பட்ட உடன்பாட்டில் நேருவிற்குகூட ஏமாற்றம் இருந்தது. காங்கிரசின் முக்கிய தலைவர்கள் மார்ச் 4 அன்று இரவெல்லாம் விழித்து காந்திக்காக காத்திருந்தனர். காந்தி உடன்பாடு ஏற்பட்டு மார்ச் 5 விடியற்காலை 2 மணி அளவில் திரும்புகிறார். ராபர்ட் பெர்னேசின் டைரிகுறிப்புகள் இவ்வுடன்பாட்டு நிகழ்வுகளை பேசுகின்றன.

சிவில் ஒத்துழையாமையை நிறுத்திக்கொள்வது, வட்டமேசையில் பங்கேற்பது, சுயாட்சிக்கான அரசியலமைப்பு சட்டவிதிகள், வன்முறையில் ஈடுபட்டிராத அரசியல் கைதிகளை விடுவிப்பது, அரசாங்க ஒடுக்குமுறைகளை நிறுத்துவது, பறிமுதலான சொத்துக்களை திரும்பத்தருவது, அரசாங்க ஊழியர்களுக்கு திரும்ப வேலை, உப்பு தயாரிக்க அனுமதி, வரிகளை கட்டுவது என்பது உடன்பாட்டின் சாரமாக இருந்தது. ஆனால் 22 மணி நேரத்திற்கு மேலாக நடந்த விவாதங்கள் பதிவாகவில்லை. எனவே எல்லாமே சொல்லப்பட்ட விஷயங்கள் என்ற அளவில் எடுத்துக்கொள்ளவேண்டியவையாக இருக்கின்றன.

ஜனவரி 26 1931ல் தான் காந்தி விடுதலையாகி வருகிறார். இர்வினுடன் பேச்சுவார்த்தை என்பதில் அவருக்கு ஆரம்பத்தில் தயக்கம் இருந்தது. பின்னர் பிப்ரவரி 17ல் துவக்குகிறார். மதன் மோகன் மாளவியா பிப்ரவரி 14 அன்று கருணைகாட்டவேண்டும் என்கிற வேணுகோளை விடுக்கிறார். மனிதாபிமான

அடிப்படையில் மரணதண்டனையையை மாற்றவேண்டும் என்கிறார். அதே நாளில் தேஜ்பகதூர் சாப்ரு மற்றும் ஸ்ரீனிவாச சாஸ்திரிகளிடம் கருணைமனு தொடர்பாக நடவடிக்கை எடுக்குமாறு மகாதேவ தேசாய் மூலம் காந்தி செய்தி அனுப்புகிறார். இதை சந்தர் பால் சிங் பதிவு தெரிவிக்கிறது. சந்தர்பால்சிங் காந்தியின் தொடர்ச்சியான இர்வின் சந்திப்புகளையும் தெரிவிக்கிறார்.

On Feb 17, 1931, Gandhi discussed this matter with the viceroy. According to Gandhi, he told the viceroy, “This has no connection with our discussion and it may even be inappropriate on my part to mention it. But if you want to make the present atmosphere more favourable, you should suspend Bhagat Singh's execution.” என்கிற குறிப்பை பேராசிரியர் ஜெயின் நாரயண் சர்மா தருகிறார். .

பிப்ரவரி 18 அன்று காந்தி பகத்சிங் பிரச்சனையை பேசினார். பொதுவாக காந்தி மரணதண்டனைக்கு எதிராக நின்றவர். முதல் சந்திப்பில் தண்டனை மாற்றம் குறித்து ஏதும் பேசவில்லை என்று இர்வின் தரப்பு குறிப்புகள் தெரிவிக்கின்றன. கண்ணுக்கு கண் என்பது உலகை குருடாக்கிவிடும். எவராக இருந்தாலும் திருந்த வாய்ப்பு தரவேண்டும் என்பதே அவரது பார்வை. பகத்சிங் பிரச்சனையில் மரணதண்டனையில் மாற்றம் என்றால் கூடுதலாக அமைதி நிலவும் என்றும் காந்தி கருத்து தெரிவித்தார். சரியோ தவறோ வெகுஜன கருத்து அவ்வாறு இருக்கிறது என்றும், இந்த உயிர்களை காப்பதன் மூலம் பல அப்பாவி உயிர்கள் பலியாவதும் தடுக்கப்படலாம் எனவும் காந்தி இர்வினுக்கு மார்ச் 23 அன்று எழுதிய கடிதத்தில் தெரிவித்திருந்தார். சிறப்பு பிரதிநிதி மூலம் அக்கடிதம் அனுப்பபட்டது.

Execution is an irretrievable act. If you think there is slightest chance of error of judgment, I would urge you to suspend for further review, an act that is beyond recall . Charity never faileth என்கிற வாசகம் கொண்ட அக்கடிதத்தை அனுப்பிவிட்டு அவசியமெனில் நேரில் வந்து பேசவும் தயார் என காந்தி தெரிவித்தார்.

இர்வின் தனக்கு மார்ச் 27, 1931 அன்று கொடுக்கப்பட்ட பிரிவு உபச்சார விழாவில் காந்தியின் வற்புறுத்தலை குறிப்பிட்டுப் பேசினார். தனது கொள்கைக்கு எதிராக நடந்துகொண்ட இளைஞனுக்காக மரணதண்டனையை மாற்றவேண்டும் என அந்த அகிம்சை மனிதர் தன்னிடம் வலியுறுத்தியதையும், அரசியல் செல்வாக்கிற்கு உட்பட்டு இப்படிப்பட்ட முடிவுகளை எடுக்க கூடாது என தான் உணர்ந்ததாகவும் விளக்கிக்கூறினார். இதை ட்ரிப்யூன் செய்திப்பத்திரிகை மார்ச் 28 1931 அன்று பிரசுரித்திருந்தது.

பகத்சிங்கை தூக்கில் ஏற்றினால் அவர் தேசத்தியாகியாக கொண்டாடப்படுவார். நிலைமைகள் சற்று விபரீதமாகும். ஆனாலும் சட்டப்பிரச்சனைகளில் அதன்படி செயல்படுவதுதான் தனக்கு சரியாகப்படுகிறது என்பதையும் காந்தியிடம் தான் சொன்னதாக இர்வின் தெரிவித்தார். மேலும் பகத்சிங்கிற்கு அத்தண்டனை சரியானதே என்பதால் அதை மாற்றவேண்டும் என்பது தன்னால் இயலமுடியாத ஒன்றானது என்றும் இர்வின் தெரிவித்திருந்தார். The Earl of Halifax- fullness of daysல் இப்பதிவு இருப்பதாக அறியமுடிகிறது.

ஆரம்பத்தில் பகத்சிங்கின் பட்டினிப்போராட்டத்தின்போது ஜின்னா ஆதரவான நிலையை எடுத்தார். பின்னர் தாகூர் போன்றே ஜின்னா தூக்குதண்டனைப் பற்றி மெளனம் காத்தார்.

குண்டுவீசிய வழக்கிற்கு பகத்சிங் சார்பாக ஆசப் அலி வழக்கறிஞராக இருந்தார். வன்முறை வழியை ஏற்கவில்லை என்கிற பொருட்பட நகல் ஒன்றை எழுதிக்கொண்டுபோய் பகத்சிங்கை ஏற்கவைத்து அவரின் ஒப்பம் பெற்றுவந்து காந்தியிடம் காட்டினால் பகத்சிங் தண்டனை குறைப்பிற்கு காந்தியின் கரங்களை அது வலிமைப்படுத்தும் என ஆசப் அலி கருதினார். இம்முயற்சி குறித்து காந்திக்கு தெரிவிக்கப்பட்டது. பகத்சிங்கும் நண்பர்களும் வன்முறையை ஏற்கவில்லை என்பதை உரிய அதிகாரிகளுடன் விவாதித்துவிட்டு தனக்கு தெரிவிக்குமாறு காந்தி அறிவுறுத்தினார். ஆனால் பகத்சிங்கை சந்தித்து ஆசப் அலி உரையாட உள்துறைச் செயலர் அனுமதி மறுத்துவிட்டார்.

பஞ்சாப் அரசாங்க செயலரின் தனி உதவியாளர் ஆண்ட்ரூஸ் மகளைத்தான் சாண்டர்ஸ் திருமணம் செய்வதாக இருந்தார் என்கிற செய்தியும் நமக்கு கிடைக்கிறது. அவரின் செல்வாக்கும் இவ்வழக்கில் இருந்திருக்கலாம். ராவல்பிண்டிக்கு மாற்றப்பட்ட போலீஸ் சூப்பரிண்டெண்ட் ஜேம்ஸ் ஸ்காட்டும் வழக்கின் திருப்பங்களை உன்னிப்பாக கவனித்து ஆலோசனைகளை சொல்லிவந்ததாகவும் அறியமுடிகிறது. ஆண்ட்ரூஸ் பல ஆங்கில அதிகாரிகளை சந்தித்து முறையிட்டதாகவும் தனக்கு ஆறுதலாக நிற்கவேண்டிய அவசியத்தை வலியுறுத்தியதையும் அறியமுடிகிறது. ஆங்கில மாதுகளுக்கு பாதுகாப்பற்ற சூழலை அரசாங்கம் அனுமதிக்கக்கூடாது என்கிற தாக்கம் பரவலாக்கப்பட்டது.

அப்போது பொறுப்பில் இருந்த 7 கவர்னர்கள் உறுதியாக நிற்குமாறு வைஸ்ராயை வலியுறுத்தினர் என்கிற செய்தியை ராபர்ட் பெர்னே தெரிவிக்கிறார். பகத்சிங் மரணதண்டனையை ரத்துச் செய்ய அடிப்படைகள் காந்திக்கும் இல்லை என

அறிந்தும் அவர் மனிதாபிமான அடிப்படையில் முயற்சிகளை மேற்கொண்டதாக ராபர்ட் பெர்னே சொல்கிறார். பஞ்சாப் போலீஸ் அதிகாரிகள் கூண்டோடு ராஜினாமா எச்சரிக்கையை செய்ததாக பீப்பிள் என்கிற பத்திரிகை தலையங்க செய்தியில் எழுதியது. அந்த இளைஞர்கள் இரு போலீஸ் உயிரை பறித்தவர்கள் என்கிற போலீஸ்தரப்பு வாதத்தை எழுதியது.

பகத்சிங்கின் தந்தை  கிஷன் சிங் கவர்னர் ஜெனரலின் அதிகாரத்தை கேள்விக்கு உட்படுத்தி பிரைவி கவுன்சிலுக்கு பெட்டிஷன் ஒன்றை செப் 20, 1930ல் தந்தார். பிப்ரவரி 17, 1931ல் அது நிராகரிக்கப்பட்டது. வழக்கறிஞர்கள் லால்கபூர், பால்ஜித் சிங் போன்றவர்கள் பிப்ரவரி 16 அன்று வைஸ்ராய்க்கு தந்தி அனுப்பினர். நீதிமன்ற அமர்வுக்காலம் முடிந்த நிலையில் மரணதண்டனை செல்லாது என்றனர். பிப்ரவரி 25ல் ஆட்கொணர்வு மனு ஒன்றை போட்டனர். அவர்கள் எடுத்த முயற்சிகள் பலனளிக்கவில்லை.

On 27th Feb, 1931 , Viscount Dunedin , while rejecting the appeal to the Privy Council, observed "Their Lordship must add that although the Governor General thought it to expound the reasons which induced him to promulgate this Ordinance, this was not in their Lordships' opinion in any way incumbent on him as a matter of law. Their Lordships for these reasons have humbly advised His Majesty that this petition should be dismissed "

பிரிட்டன் நாடாளுமன்ற உறுபினர்கள் மாக்ஸ்டன், கிங், ஜோவெல்ட் போன்றவர்கள் பகத்சிங் மரணதண்டனையை மாற்றவேண்டும் என வைஸ்ராய்க்கு வேண்டினர்.

இர்வின் அவர்களின் இல்லத்தில் ஆங்கில அதிகாரிகளை சமாதானப்படுத்தும் வகையில் அவசரக்கூட்டம் ஒன்று மார்ச் 12 மற்றும் 13 1931ல் நடத்தப்பட்டு கருத்துக்கள் கேட்டறியப்பட்டது.

வைஸ்ராய் அரசாங்க செயலருக்கு தந்தி மூலம் தங்களது நிலைப்பாட்டை தெரிவித்தார். தலமட்ட அரசாங்கம் சொல்வது சரியாக தெரிகிறது. கராச்சி காங்கிரசிற்கு பின்னர் தண்டனை நிறைவேற்றம் என்பதில் சாதகமான அம்சம் ஏதும் தெரியவில்லை. எனவே மார்ச் 23க்குள் நிறைவேற்றிவிடலாம் என்பது தெரிவிக்கப்பட்டது. மார்ச் 24 1931ல் தணடனை நிறைவேற்றம் என இருந்தது. கடுமையான போராட்டங்கள் எழலாம் என அரசாங்கம் அறிந்து முதல் நாள் மார்ச் 23 அன்றே தூக்கை நிறைவேற்றும் வகையில் கடைசி விருப்பம் கேட்கப்பட்டது. அம்மா சமைத்த உணவு என்றார் பகத்சிங். புரியாமல் விழித்த வார்டனிடம் கவலை வேண்டாம் இங்குள்ள போகா என்கிற கழிப்பறை சுத்தம் செய்யும்

தொழிலாளியைத்தான் அம்மா என குறிப்பிடுவதாக தெரிவித்தார். கண்ணீர் மல்க தயங்கிய அத்தொழிலாளியை தனக்கு உணவு சமைக்க சம்மதிக்க வைத்தார் பகத்சிங்.

காந்தி மார்ச் 23 அன்று எழுதிய கடிதத்தில் வைஸ்ராயை சந்திக்கும் விருப்பத்தை தெரிவித்திருந்தார். கராச்சி செல்வதை ஒருநாள் ஒத்தியும் போட்டார். காந்தி கராச்சி சென்றபோது திரும்பி போ முழக்கத்துடன் இளைஞர்கள் கருப்புக்கொடி ஆர்ப்பாட்டம் செய்தனர். காந்தியம் வீழட்டும் என முழக்கம் இட்டனர். பிரிட்டிஷ் சுரண்டலாளர் பக்கம் காந்தி என்கிற வசை வீசப்பட்டது. கொடி ஏந்திவந்த ஒருவர் காந்தி மண்டையில் அடித்தார். கராச்சி காங்கிரசில் உற்சாகம் இல்லை. மூவரின் தூக்கு என்கிற சோகம் கவ்விப்படர்ந்திருந்தது. பகத்சிங் பெயர் பெருமளவு உச்சரிக்கப்பட்டது. காந்தியை புகழ்ந்தவர்கள் எழுதிய தீர்மானம் கூட மொழி உக்கிரத்தை கொண்டிருந்தது என பட்டாபிசீதராமையா பதிவு சொல்கிறது.

காந்தி தனது அகிம்சை குறித்த நிலைப்பாட்டை விளக்கி சொற்பொழிவாற்றினார். வன்முறையால் சுயராஜ்யம் உருவாகாது- அழிவே மிஞ்சும் என்றார். என்னைக் கொல்லலாம். காந்தியம் இருக்குமே என்றார். உண்மையை அகிம்சையைக் கொன்றால்தான் காந்தியத்தைக் கொல்லமுடியும். சுயராஜ்யத்தை உண்மையான அகிம்சை வழியில் பெறுவது என்பதுதானே காந்தியம். மரணதண்டனையை மாற்றுவது என்பதை இர்வினுடன் உடன்பாட்டு அம்சமாக தான் மாற்றவில்லை என்பதையும் அவர் தெளிவுபடக்கூறினார். I pleaded Viceroy as best as I could. I brought all pressure at my command to bear him. I poured my soul into it but no avail என அவர் குறிப்பிட்டார். ஆனால் வைஸ்ராய் ஏமாற்றிவிட்டார் என்கிற புரிதலை அவர் வெளிப்படுத்தவில்லை.

பகத்சிங்கின் தியாகத்திற்கு புகழாரம் சூட்டினார் நேரு. வன்முறை பாதையாகாது, அழிவிற்கு கொண்டு சேர்க்கும் என்றார். கீழ்கண்ட தீர்மானத்தை நேரு முன்மொழிந்தார். அரசியல் வன்முறையில் காங்கிரஸ் தன்னை இணைத்துக்கொள்ளாது- ஏற்கவும் செய்யாது. பகத்சிங், ராஜகுரு, சுகதேவ் ஆகியவர்களின் வீரத்தை தியாகத்தை போற்றுகிறது. அவர்களுக்கு அஞ்சலி செய்கிறது. நாடு முழுமையாக கோரிய தண்டனை குறைப்பை அரசு நிராகரித்து மூவரையும் தூக்கிலிட்டது அரசின் பழிவாங்குதல் செயலே என்கிற வகையில் தீர்மானம் சென்றது.

தீர்மானத்தின் முதல்வரி குறித்து எதிர்ப்புகள் எழுந்தன. காந்தி மறுமுறையும் உரையாற்றினார். பகத்சிங் வழியை காப்பியடிக்க முடியாது. கொலைகளின் வழியே

நியாயத்தை நிலைநிறுத்த முடியாது. அப்படித்தான் நியாயத்தை பெறவேண்டும் என்கிற எண்ணம் நம்மிடம் எழுந்துள்ளது என்பதாக அவர் உரை சென்றது..

மார்ச் 23 அன்று லெனின் புத்தகத்தை பகத் படித்துக்கொண்டிருந்தார். அதை முடிக்கவும் விரும்பினார். இன்குலாப் முழக்கம் கேட்க துவங்கியது. தலைமை வார்டன் சர்தார் சத்தார் சிங் முடிவு வந்துவிட்டது மகனே என்றார். எப்போது அந்த அதிர்ஷ்ட நிமிடம் என்றார் பகத்சிங். இன்று மாலை என்றனர். என்னை படைத்தவனை சந்திக்கும் நேரம் வந்துவிட்டது என்றார். பிரார்த்தனை செய் மகனே என்றார் வார்டன். உங்கள் உணர்வை மதிக்கிறேன். நீங்கள் முன்னதாக தெரிவித்திருக்க வேண்டாமா என்றார் பகத்சிங். மாலை 3 மணிக்கு தான் உறுதி செய்தனர் என்றார் வார்டன். கடைசி நேரத்தில் நான் இறைவனை பிரார்த்தித்தால் அவர் என்னை கோழை என நினைத்து விடுவார் என்றார் பகத்.

பாட்டாளிவர்க்க சர்வாதிகாரம் என்பதில் அன்றிருந்த கம்யூனிஸ்ட்களைப் போலவே பகத்தும் நம்பிக்கை வைத்திருந்தார். சோசலிச புரட்சி என பேசிவந்தார். கம்யூனிஸ்ட் அகிலம் வாழ்க எனக் கூட முழங்கினார். ஆனாலும் அவர் கம்யூனிஸ்ட் கட்சிக்குழுக்களில் சேர்ந்து ஏன் செயலாற்றவில்லை என்பது குறித்து விவாதங்கள் நடந்து வருகின்றன. தான் தனிநபர் பயங்கரவாதி அல்ல என தெளிவுபடுத்த முயன்றார். தங்களை விடுதலைப் போரின் இராணுவப்பிரிவாக புரிந்து கொள்ளவேண்டும் என்றார். புத்தக வாசிப்பையும் அறிவு பெருக்கத்தையும் நேசித்தவர் அவர். அவரும் தோழர்களும் படித்த நூற்றுக்கணக்கான புத்தக பட்டியல் கூட வெளியாகியுள்ளது. நான் ஏன் நாத்திகன் ஆனேன் உட்பட ஏராள கட்டுரைகளை எழுதியவர் பகத்சிங். இந்திய இளைஞர்களின் ஆதர்ஷ நாயகனாக பகத்சிங் மின்னத்துவங்கினார்.

The country will be served better by my sacrifice என்றவர் பகத்சிங். தண்டனைமாற்றம் பெறுவது என்பதைவிட தியாகத்தால் ஆற்றும் தேசக்கடமை உயர்ந்தது என பகத்சிங் கருதினார்.

துணைநின்றவை:

1. Shaheed Bhagat sing An immortal revoultionary The marxist ap 2006

2. Bhagath Sing- Doctorate Thesis Rupinder Kaul

3. GANDHI AND BHAGAT SINGH – V N DUTTA

4. The life and times of Bhagat Singh by Mahesh Sharama

5. The History of Legend by Kama Maclean

6. What Mahatma Gandhi did to save Bhagat Singh Chander Pal Singh Gandhi Marg, October-December 2010

7. Mahatma Gandhi and Bhagat Singh : A Clash of Ideology by Prof J N sharama Gandhi Marg Jan 2012



**ஆசிரியரின் பிற நூல்கள்**

1. மார்க்சியத் தடங்கள்

2. ரோசாலக்ஸம்பர்க்

3. போராளிகளின் குரல்

4. பகவத்கீதை பன்முகக் குரல்கள்

**5. Trade Justice in Telecom**

**6. Selected Ideas of O.P Gupta**

7. ஹெகல் துவங்கி..

8. கார்க்கியின் அரசியல்வெளி

9. நவீன சிந்தனையின் இந்தியப் பன்முகங்கள்

10. காந்தியைக் கண்டுணர்தல்

11. நேருவின் மரபு

12. பெரியாரின் பொதுவுடைமை புரிதல்

13. அம்பேத்கரும் கம்யூனிசமும்

14. தோழர் காந்தி மகாத்மாவின் சோசலிச உரையாடல்

15. பாபாசாகேப் டாக்டர் அம்பேத்கர் (என் எளிய வாசிப்பில்)

16. லெனின் நான்கு கட்டுரைகள்

17. கப்பற்படை எழுச்சி பெருமிதமும் சோகமும்

18. என் வாசிப்பில் ..( 62 கட்டுரைகள் )

சிறு வெளியீடுகள்

1. ஷியாம்ஜி கிருஷ்ண வர்மா

2. சிகாகோ மேதின தியாகிகள்

3. பகுனின் போராட்ட வாழ்வும் அனார்க்கிசமும்

4. விடுதலைக்கு முன்னர் எம் என் ராய்

5. பிரடரிக் எங்கெல்ஸ் நட்பின் சிகரம்

6. நேதாஜி சுபாஷ் – கம்யூனிஸ்ட்கள் உறவும் உரசலும்

7. காந்தியும் கம்யூனிசமும்

8. வட்டமேஜை மாநாட்டில் அம்பேத்கர்

9. வரலாற்றில் செளரி செளரா (நூற்றாண்டின் நினைவாக)

www.pattabiwrites.in